# மங்களேசுவரன்

என்னும்

# பத்திராயு

---

வெ. சு. சுப்பிரமணியம்

தமிழ்ப் பண்டிதர், பச்சையப்பன் கலாசாலை, சென்னை.

இயற்றியது.

---






சென்னை

1924

காபிரைட்]

[விலை அணா 8.

# முகவுரை

மாந்தர்சட்கு நல்லறிவைப் புகட்டி நல்வாழ்வில் புகுத்தவல்லதாய், அருமறையுட் பொதிந்து கிடக்கும் பொருள்களை விளக்க வல்லன இதிகாசங்களும் புராணதிகளுமே என்பது கற்றுணர்ந்தோ ரனைவரும் அறிந்ததேயாகும்.

ஆங்கில மொழிபெயர்ப்புக்களாகப் பல கதைகள் புத்தக வடிவமாக வெளிப்போந்து நவீன நாகரீகத்தைப் பரப்பிவரும் இக்காலத்து அவ்வரிய இதிகாச புராண கதைகள் வெளிவாராதொழியின் அவற்றுல் நம் மாணவர்கள் அறிதற்குரியனவாகிய அவ்வரிய பொருள்கள் அறிதற்கியலாதனவாகும். அங்ஙனமாயின் அக்கருத்துகள் எல்லாம் பூமியிற் புதையுண்ட பொருள்போலப் பிற்காலத்துத் தோன்றும் நம் இளைஞர்களுக்குச் சிறிதும் பயன்படாதனவாய்விடும்.

அங்ஙனம் ஆகாமல் அவ்வரிய பொருள்கள் இளைஞர்களுக்குப் பயன்படும்படி செய்யும்பொருட்டு இதிகாசங்களிலும் புராணங்களிலும் உள்ள கதைகளை மாணவர்கள் தாமே படித்தற்குரிய எளிய நடையில் எழுதக் கருதி முதலாவதாக இம்"மங்களேசுவரன்" என்னும் இச்சிறு கதையை எழுதினேன். இது பிரமோத்திர காண்டத்தில் உள்ளது. என்னுடைய இம்முயற்சி பயனுடையதாகச் செய்தல் வேண்டும் என அறிஞர்களைக் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

கோமளேசுவரன்பேட்டை,
10—4—24.

இங்ஙனம்,
வெ. சு. சு.

# மங்கலேசுவரன்

அல்லது

# பத்திராயு.

## முதல் அத்தியாயம்.

திருவளர்ந்தோங்கும் பாதகண்டத்தே முத்திதரு நகர் ஏழனுள்ளும் முந்தியதான அவந்தி என்னும் பெயர் கொண்ட புராதன நகரமொன்றுண்டு. அந்நகரம் எல்லாச் செல்வங்களுக்கு மிருப்பிட மென்னலாம்படி நானில வளங்களும் ஒருங்கே யமையப்பெற்றிருந்தது. மலைப்புறங்களில் சிற்றருவிகளின் ஆரவாரத்தோடு, மதஜலம் பெருகுகின்ற களிற்றினங்களின் பிளிற்றொலியும், வேடுவமக்கள் முருகவேளுக்குப் பரிவுடன் செய்யும் பலவகைத்தாய விழவினொலியும் ஆங்கே மலிந்திருக்கும்; மேகங்கள் இடிக்கும் போதெல்லாம் நீலமணிபொதிந்த ஆலவட்டம் போன்ற தமது கலாபங்களை விரித்து மஞ்ஞைக்குலங்கள் ஆடாநிற்கும்; அசோகு, சந்தனம், தேக்கு முதலிய மரங்கள் வானத்தை யளாவி வளர்ந்திருக்கும்; அவைகளின் நீழலின் கண்ணே பிடிக்குலங்கள், கமுகங்குலைகளால் தமது களிற்றினங்களினது கன்னங்களினின்றும் பெருகுகின்ற மதநீரை யுண்ணவரும் வண்டினங்களை யோட்டிநிற்க, ஆண் யானைகள் பெருமகிழ்ச்சியுடன் உறங்கிக்கிடக்கும்.

காடுகளிலெங்கும் இடையர்களின் குழலொலியானது பல்வகைப்பட்ட பறவைகளின் இனிய பாட்டிசையினு மிகுந்தொலிக்கும். குறிஞ்சி, கொன்றை, முல்லை முதலிய மலர்களின் நறுமணம் வண்டினங்களை வாடச்செய்யும். கடற்கரை நிலங்கள் எங்கும் செம்படவர்களின் மீன்பிடிக்கும் ஓசையும், பரதமகளிரின் மீனுணக்கும் ஆரவாரமும், தலையச் சிறுவர்களின் நீர்விளையாட்டொலியும் கடலினது ஆர்ப்பினும் பதின்மடங்கு மீறியொலிக்கும். தாழை, புன்னை, நெய்தலாதிய மலர்களின் நறுமணங் கடலின் புலவு நாற்றத்தை நீக்காநிற்கும். மருதநிலங்கள்தோறும் உழவினர்தம் ஆரவாரமும், உழத்தியர்களின் கீதநாதமும், நாட்டிய மகளிர்களின் மத்தளவொலியும், சங்கினங்களின் ஓசையும் அதிகரித்திருக்கும். ஒருபுறம் வானமளாவிய வளர்ச்சியினையும் நெருங்கின குலைகளையுமுடைய தெங்கு, கமுகு, மா, பலா, கதலி முதலிய மரங்களும், மஞ்சள், இஞ்சி, சோம்பு முதலிய செடிகளும் அடர்ந்து வளர்ந்திருக்கும். மற்றுமோர்புறம் எருமைக்கன்றுகள், முற்றிய செந்நெற் கதிர்களை வயிறாரவுண்டு, ஆங்காங்குள்ள நெற்கூடுகளின் நிழலிலே உறங்கிக்கொண்டும், குவளைமலர்கள் மலர்ந்துள்ள பொய்கைகளில் வீழ்ந்து உழக்கிக்கொண்டுமிருக்கும். தடாகங்கள் தோறும் தாமரை, ஆம்பல் முதலிய மலர்கள் அழகாய்மலர்ந்து திகழ்வது கண்கவர்வனப்பினையுடையதாகும். அந்நிலப்பெண்களெல்லாம் விஷ்கிரேஷ்டரின் மனைவியாகிய அருந்ததியைப்போன்ற கற்பும், திருமகளைப்போன்ற அழகும் வாய்க்கப்பெற்றவர்கள். ஆண்மக்களெல்லாம் மன்மதனைப்போன்ற அழகு பெற்றவர்கள்; ஒன்றுபட ஊக்கத்தினை

யும் தளராத முயற்சியினையும்உடையவர்கள். இவ்வண்ணம் நீர்வளம் நிலவளம் முதலிய வளங்கள் பலவும் ஒருங்கே யமையப்பெற்ற விந்நகரத்தைப் புலவர்கள்,

"நிலமகள் முகமோ திலகமோ கண்ணோ நிறைநெடு
மங்கல நாணோ
இலகுநன் மார்பின் ஆரமோ உயிரின் இருக்கையோ
மலர்மகட் கினிய
மலர்கொலோ மாயோன் மார்பினன் மணிகள் வைத்தபொற்
பெட்டியோ வானோர்
உலகின்மே லுலகோ வூழியின் இறுதி உறையுளோ
யாதெனவுரைப்பாம்" (கம்பர்)

எனச் சிறப்பித்துக் கூறுவது மிகவும் பொருத்தமானதே. இவ்வாறு அநந்தவளம் பெருகும் இவ் அவந்தி யென்னும் நகரத்தின் கண்ணே மந்தரன் என்கின்ற அந்தணன் ஒருவனிருந்தான். அவனுக்கு அளவற்ற செல்வமுண்டு. அவ்வந்தணனைக் குபேரனுங் கண்டு வெட்கமுறுவான் என்றால் அவனது செல்வப் பெருக்கினைக் கூறவும் வேண்டுமோ? ஆனால் சின்னாளிருந்து பின்னை எழிந்துபடும் இழிந்த தன்மையதான பொருட் செல்வத்தை யொருபொருட்டாக மதித்து அச் செல்வச் செருக்கினால் அவன் கண்மூடண்டிருந்தான். அதனால் அவன் அந்தணருக்குரிய "ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல்" என்னும்ஆறு கருமங்களையும் அறவே மறந்தான்.ஆசையால் மனம் விரும்பும் உணவுகளை யுண்டுவருவான். தன்வருணத்திற்குத் தகுதியற்ற ஆடையாபரணங்களை யணிந்துகொள்வான்.

நறிய மலர்களைச் சூடித் தினந்தோறும் இழிகுல மாதரை மணந்து இன்பம்நுகர்ந்துவருவான். அம்மாதர்களது குலம் கோத்திரம் தொழில்முதலியவற்றைச் சிறிதும் கவனியான். சிற்றறிவினரை வெறிமயக்கு செய்துநரகிடை வீழ்த்த வல்ல நாரியர்களைக்கூடி உறவாடிய பெரு மகிழ்ச்சியினால் அவர்களிடமிருந்து உண்ணத்தகாத பலவித ஊன்களை ஊனுடன் அருந்துவான். தன்னிடமுள்ள பொருள்களை யெல்லாம் அவ்விலை மாதர்கட்குஉதவி அவர்களுடனிருந்து அகமகிழ்வான். "பெண்கள் பால் வைத்த நேயம் பிழைப் பரோ சிறியோர் பெற்றால்" என்கிறபடி காமத்தால் வருங் கேட்டினை இன்னதென்றுஉணராத இவ்வந்தணன் இவ்வாறு காலங் கழித்து வரலானான்.

அக்காலத்தே அவ்வூரில் ஆடல், பாடல், அழகு என்ற மூன்றுங் குறைவுபடாமல் அமையப்பெற்ற பிங்கலை யென்னும் நாடகக்கணிகை யொருத்தி யிருந்தாள். அவள் பார்ப்போர் புலன்களைக் கொள்ளை கொள்ளத்தக்க வனப்பினை வாய்க்கப் பெற்றவள்.

*"வம்புலாம் கூந்தல் மனைவியைத் துறந்து பிறர்பொருள்
தாரமென்றிவற்றை
நம்பினார் இறந்தால் நமன்தமர் பற்றி யெற்றிவைத்
தெரியெழுகின்ற

---

*வம்பு—வாசனை; உலாம்—வீசுகின்ற; பிறர் பொருள்—அன்னியருடைய பொருளையும்; தாரம்—மனைவியையும்; நமன்தமர்—எமனும் அவனுடைய தூதர்களும்; பற்றி—கைப் பற்றிக்கொண்டு; எற்றிவைத்து—பிரஷ்டனென்று அகற்றி; எரி—அக்கினி; இயன்ற—செய்யப்பட்ட; பாவை—பிரதிமை; எம்பனேன்—அடியேன்—

செம்பினு லியன்ற பாவையைப் பாவி தழுவென
மொழிவதற் கஞ்சி
நம்பனேன் வந்துன் திருவடி யடைந்தேன் நைமிசா
ரணியத்து ளெந்தாய். (திருமங்கைமன்னர்)

என்னும் பெருவாக்காகிய திருவாக்கினை மறந்தவனாய்த் தனது சுற்றத்தார் பலவாறுகூறியும் செவிகொடாதவனாகி அப்ஃபிங்கலை யென்னும் விலைமாதினை நேசித்து மணந்தான்

---

## இரண்டாம் அத்தியாயம்.

* "ஒன்னார்த் தெறலு முவந்தாரை யாக்கலும்
எண்ணிற் றவத்தான் வரும்." (வள்ளுவர்)

உலகத்தே மக்கட்கு உறுதியென உயர்ந்தோரால் எடுக்கப்பட்ட பொருள்கள் அறம் பொருள் இன்பம் வீடு என நான்கே. இவற்றை வடநூலார் தருமார்த்த காம மோக்ஷமென்பர். இவைகளைப் பெறுதற்குத் தவம் இன்றி யமையாதது. தன்னுயிர்க்கு வருந் துன்பங்களைப் பொறுத்து மன்னுயிரோம்புதலையே தவம் என்ப. இத்தவத்திற்கு மனவடக்கமே முதற் காரணமாகும். மனவடக்கத்திற்கு உண்டியைக் குறைத்தல், பனிக்காலத்தில் நீரிலும், கார்காலத்தில் மழையிலும், வேனிற்காலத்தில் வெயிலிலும் நிற்றல் முதலியன துணைக்காரணங்களாம். தவத்தினால் எத்தகைய உயர்வையும் எளிதிற் சாதிக்கலாம். அசுரர்கள் சுரர்களை ஏவல் கொண்டதும், அரக்கர்கள் அமரர்களை

---

* ஒன்னார்—பகைவர், தெறல்—ஒழித்தல், உவந்தார்—அநுகூலர், ஆக்கல்—ரக்ஷித்தல், எண்ணில்—யோசிக்குமிடத்தில்

அடிமை கொண்டதும் தவமன்றோ ? துருவன் அடைந்த பெரும் பதவியும் தவத்தின் துணையினலல்லவா ? அவாவுற்றதை யடைதலும், அடைந்தவரை ஆதரித்தலும், பகைஞரை யழித்தலும் தவத்தினல் முடிகின்றன. தவம் தாழ்ந்தவரையும் உயர்த்தி அவர்க்குப் பெயரையும் புகழையும் பெருவாழ்வையும் தருகிறது. தவம் எமனையும் ஏமாற்றுகிறதென்றால் அதன் பெருமையைக் கூறவும் வேண்டுமோ?

* "ஈட்டுவார்தவமலான்மற்றீட்டினல்இயைவதின்மை
காட்டினர்விதியாரஃதுகாண்கிற்பார்காண்மினம்மா
பூட்டுவார்தனம்பொறாதபொய்யிடைநையப்பூநீர்
ஆட்டுவாரமரர்மாதர்ஆடுவாரரக்கர்மாதர்" (கம்பர்)

என்பது தவத்தின் ஏற்றத்தைப் புலப்படுத்துகின்றதன்றோ?

---

* ஈட்டுவார்—சம்பாதிக்க வேண்டியவர்கள், தவம் அலால்—தவத்தை மேற்கொள்ளுவதன்றி, மற்று—வேறு கருமங்களை, ஈட்டினல்—தேடிச் சம்பாதித்தால், இயைவது—கைகூடுவது, இன்மை—இல்லாமையை, காட்டினர்—வெளிப்படச் செய்தார், விதியார்—எல்லாவுயிர்கட்கும் தத்தமது வினையை யொட்டிச் சுகதுக்கங்களை அருளும் பிரமமூர்த்தி, அஃது—அந்த அதிசயத்தை, காண்கிற்பார்—காண விரும்புவோர்கள், காண்மின்—(இதோ) பாருங்கள், பூட்டு—பூட்டப்பெற்ற, வார்—கச்சணிந்த, தனம்—ஸ்தனங்களை, பொறாத—தாங்கமுடியாத, பொய்—உண்டோ இல்லையோ என்று சொல்லும்படியான, இடை—இடையானது, நைய—வருந்த, பூ—பலவித புஷ்பங்கள் நிறைந்த, நீர்—நீரினல், அமரர் மாதர்—தேவஸ்திரீகள், ஆட்டுவார்—குளிப்பாட்ட, அரக்கர் மாதர்—ராக்ஷஸ்திரீகள், ஆடுவார்—குளிப்பார்கள்.

அத்தகைய பெருமைவாய்ந்ததவத்தையே தனக்குத் தனமாகக்கொண்ட விடபயோகி யென்னும் பெரியாரொருவர் அக்காலத்தே விளங்கிவந்தார். அவர் அழல் நிறக் கடவுளின் பேரருளையேபெரிதும் பெற்றவர். தவவேடந் தலைநின்ற பரிசுத்தர். பிறவிப் பெருங்கடலை நீந்துதற்பொருட்டு ஐம்புல வேட்கையை யடக்கியவர். இப்பெரியார் ஒரு நாள் மாலைக்காலத்தே மந்தரனும் பிங்கலையும் வசித்துவரும்வீதி வழியாகச் சென்று கொண்டிருக்கையில், திடீரென மழை பெய்தது. சற்றுக் காற்றும் வீசியது.

அப்போதப் பெரியவர் அக்காற்று மழையினால் பீடிக்கப்படாதவர் ஆயினும், அவ்விருவர்களின் கருமவிசேடத்தின்பயனாக அவர்களது இல்லத்தையணுகினர். போகங்களையறவே யொழித்த அச்சிவயோகியார் தங்களது முற்றத்தே வந்துற்றதைக் கண்ட மந்தரனும் அவன் காதலியும் அவரை எதிர் சென்று அழைத்தனர். முறைமையின்படி வேண்டிய வாறு உபசரித்தனர். மகரந்தம் நிறைந்தமலர் பரப்பிய ஆசனத்தில் வீற்றிருக்கச் செய்தனர். கனிந்த கனிகளுடன் அரிய ஆவின் பாலும் கொண்டுவந்து, ஐயனே! எங்கள் பால் கருணை கூர்ந்து இவைகளை எற்றருள வேண்டுமென்று கொடுத்து உண்பித்தனர். பின்னர், சிதநீர்ப் பெய்து மலர்கொண்டுஅருச்சித்தனர். சுதம்பகஸ்தூரிகலந்த சந்தனம் பூசுவித்துவணங்கி உபசாரமொழி கூறி அன்றிரவை அவர்க ளில்லத்தின்கண்ணேயே கழிக்குமாறு வேண்டினர். அப் பெரியாரும் அதற்கு உடன்பட்டனர். மந்தரன் என்கின்ற அந்தணனும் பிங்கலை யென்றபாத்தையும் தமது பாதங்களை வருடிக்கொண்டிருக்கப் பஞ்சணைமேல் பள்ளி கொண்டனர்.

அகம் புறம் என்னும் இருவகைப் பற்றையும் அற வே விட்டொழித்த அந்தத் தபோதனர், வைகறையில் துயிலெழுந்து தாம் செல்ல வேண்டிய வழிமேற் சென்றார். பிறகு மந்தாரனும் பிங்கலையும் அவ் வில்லத்திலேயே நெடு நாளிருந்து, ஊழ்வினைப் பயனால் மந்தாரன் முன்னும் பிங் கலை பின்னுமாக இம் மண்ணுலகை நீத்து விண்ணுல கெய்தினர். நல்லூழின் பயனன்றோ துறவிகளின் கூட்டு றவை யுண்டுபண்ணுகின்றது. மந்தாரன் அடாத செய்கை களைச் செய்து, அவனது சுற்றத்தாரால் இகழப் பட்டவ னாக விருந்தும், தனது இல்லத்திற்கு வந்த முனிவரைக் கனிவோடு ஏற்று வேண்டியவாறு உபசரித்ததன் பயனாக அவன் அடைந்த பலன் வியக்கத் தக்கதொன்றாயிற்று.

---

## மூன்றும் அத்தியாயம்.

* " மாநிலங்கா வலனாவான் மன்னுயிர்காக் குங்காலை
தானதனுக் கிடையூறு தன்னால்தன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தால் கள்வரால் உயிர்தம்மால்
ஆனபயம் ஐந்துந்தீர்த்து அறங்காப்பான் அல்லனோ"
(பரஞ்சோதியார்)

இறைவனுலவிக்கப் பெற்ற இவ்வலைகடல் சூழ்ந்த அவனி யானது ஒரு நாடகசாலை போல்வதாம். அதன் கண்ணே பொருந்தப் பெற்ற உயிர்களனைத்தும் நாடக

---

* மாநிலம்—பெரிய பூமியை, காவலன்—ரக்ஷிக்கிறவன், மன்—நிலை பெற்ற, உயிர்—பிரஜைகளை, இடையூறு—துன்ப ங்கள், பரிசனம்—சிப்பந்திகள், ஊனம்—வருத்தம், பகைத் திறம்—பகைவர்களின் வல்லமை, உயிர்—மற்ற ஜீவராசிகள்.

பாத்திரங்களாதலின் ஒரு மனப் பட்டிருத்தல் கூடாதகாரி யமாம். எறும்பு முதல் யானை யீருகவுள்ள சகலமும் தத்த மது மனம் போன வாறே நடக்க வாரம்பிக்கும். அதனுலு லகம் முறை பிறழ்வெய்துவது சகஜம். இக் குறைவை யடக்கி ஒழுங்கு பெறச் செய்வதற்குத் தலைவனொருவன் வேண்டுவது அவசியம் அல்லவா? அன்றியும் எல்லா உயிர் களுக்கும் நன்மை செய்வான் வேண்டியே அவ்வுயிர்களின் கன்மானு சாரத்தை யொட்டிக் கடவுள் சிற் சில வேற்று மைகளை உண்டு பண்ணி யிருக்கிறுர். மக்களுட் சிலர் அங்க ஹீன ராயும் சிலர் அங்க லக்ஷணமுள்ளவர்களாயும், சிலர் வறியர்களாயும், சிலர் செல்வர்களாயும், மற்றுஞ் சிலர் திட காத்திர முள்ளவர்களாயும், இல்லாதவர்களாயு மிருக்கின் றனர். இவ்வித வேறு பாட்டினுற்றுன் ஒருவருக்கொரு வர் சற்று அடங்கி நடக்க வேண்டி யிருக்கின்றது. உலகந் தோன்றிய முதல் ஒருவருக் கொருவர் கீழ்ப் படிந்து நடத்தல் இயல்பாகவே யமைந்திருக்கின்றது. உயர்வு தாழ் வென்னும் இருபெருஞ் சக்கரங்களே இவ்வுலக மாகிய வண்டியைச் சரிவர நடத்துகின்றன. மக்களுள் அறிவி லும் ஆற்றலிலும் எவன் சிறந்து விளங்குகின்றுனே அவ னே ஏனையோர்களுக்குத் தலைவனுகிறுன். அவனையே உலகம் அரசனென்றழைக்கும். அவன் ஆணையின்படி எல்லாவுயிர்களும் அடங்கி நடக்கின்றன. அவன் உயிர்க ளைப் பாதுகாத்தலிலேயே கண்ணுங் கருத்துமா யிருக் கின்றுன். அவன் தன்னுலும், தனது பரிஜனத்தாலும், பகைவர்களாலும், திருடர்களாலும், விலங்குகளாலும் தன் குடிகளுக் குண்டாகின்ற இடையூறுகளைக் களைந்து காத்து

வருகின்ருன். அரசனே குடிகளுக்கு அன்னை, பிதா, குரு, தெய்வம் ஆகின்ருன். இவ்வித அரசஇலக்கணங்க ளெல்லாம் ஒருங்கே யமையப் பெற்ற வஜ்ஜிரவாகு வென்னும் அரசன் அக்காலே தசாணை நகரத்தை யாண்டு வந்தான். அவன் அறிவு, அருள், அறம், ஆற்றல், ஆண்மை முதலிய நற் குணங்களால் திருமாலே நிகர்த்தவன். "திருவுடை மன்னரைக் காணில் திருமாலேக் கண்டேனே யென்னும்" என்பது பெரியார் பணியன்ருே! அவனுக்கு அளப்பரும் செல்வங்கள் பல விருந்தும் புத்திரச் செல்வ மில்லாதிருந்தது.

* "பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற" (வள்ளுவர்)

என்று தமிழ் மறை கூறுகின்றது. ஒருவன் அடையும் பேறுகளுள் புத்திரப்பேறே மேம்பாடுடையது. அண்ட புவன சராசரங்க ளனைத்தையும் ஒரு குடைக்கீழ் ஆண்டாலும் இந்திராதிதேவர்களே தனக்கு ஏவலாளர்களாக இருந்தாலும், புத்திரனில்லாதவாழ்வு ஒரு வாழ்வாகாது. புத்திரனே யொருவனுக்கு மண்ணும் விண்ணுமாகிய இரண்டு நிலங்களிலும் அனுபவிக்கும் இன்பத்திற்குக் காரணனுகின்ருன். புத்திரனே ஒருவனை நரகத்தினின்று விடுவிக்கின்றவன். அதுபற்றியன்ருே உலகில் புத்திரன் என்னும் காரணப்பெயர் தோன்றியுளது என்று பலவாறு சிந்தித்தவனுகி அப்பேற்றினை யெவ்வாருயினும் அடைய வேண்டுமென்று தனது மூத்த மனைவியுடன் பலவகைத்

* பெறும் அவற்றுள்— ஒருவன் அடைதற் குரிய பொருள்களில், மக்கட்பேறு—புத்திரபாக்கியம், அல்ல—அல்லாத.

நாய தானதருமங்களைச் செய்துவந்தான். இறைவன்கோயில் கொண்டிருக்கும் பலக்ஷேத்திரங்களைத் தரிசித்துவந்தான். அவைகளொன்றாலும் அவன் விரும்பிய பலனை அடைந் தானில்லை. அதுகண்ட அம்மன்னன் இனி இறைவனை நோக்கித்தவங் கிடந்தாலல்லது புத்திரப்பேற்றை யடைய முடியாதென்னும் சிந்தையனாய் அரிய தவங்கிடந்தான். எல் லாம் வல்ல இறைவன் அவனது பெரிய தவத்திற்கிணங்கி அவனை அசரீரியாகவிளித்து "அரசரேறே! யாம் உனது தவத்தை மெச்சினோம்; நீ விரும்பியபேற்றையும் உன் மூத்தமனைவி சுமதியின்மாட்டே பெறுமாறு அருளினோம்" என்றார். அரசனும் திடுக்கிட்டு எழுந்து இறைவனது கருணையை நினைந்து ஆநந்தக்கடலில் மூழ்கியவனாய் அரச காரியங்களைக் கவனிக்கலாயினன். அன்றுமுதல் சுமதி யின் தேகம் வெளுக்க வாரம்பித்தது. மாதங்களும் ஒன் றின்பின் ஒன்றாய்த் தொடர வாரம்பித்தன. சுமதி சூலுற்ற தைக் கண்ட அரசனது ஏனைய மனைவிமார்கள் பொறாமை யுற்றார்கள். அவர்களனைவரும் ஒருங்குகூடித் தனியிடஞ் சேர்ந்து பின்வருமாறு ஆலோசிக்கலாயினர். "அந்தோ நாம் என்செய்வது; சுமதியோ கருவுற்றிருக்கின்றனள். அது பிள்ளையாகப் பிறக்குமாயின் நாம் அனைவரும் அவ ளுக்கு அடிமையாக வன்றோ காலங்கழிக்கவேண்டும்" என ஆலோசித்தனர். அன்றுமுதல் அவர்கள் சுமதிபால் அதிக அன்புள்ளவர்போல் நடித்து மிகவும் பரிவோடு அவ ளுக்கு அன்னபானாதிகளைக் கொடுத்து உண்பித்து வந்த னர். இவ்வாறிருக்க ஒருநாள் அவள் உண்ணு முணவில் விஷங்கலந்திட்டார்கள். "அவனன்றி யோரணுவும் அசை

யாது", "ஒன்றைநினைக்கின் அது ஒழிந்திட்டொன்றாகும்" என்னும் முதுமொழிகளுக் கிணங்க, இவர்க ளொன்றை நினைத்துச் செய்தார்கள். அது வேறொன்றாக மாறியது. இவர்கள் கொடுத்த விஷம் கருவைக் குலைத்தபாடில்லை. மற்றென்னதான் செய்தது? அந்தோ பரிதாபம்! சுமதியின் வயிற்றிற் சென்று நெருப்பையொத்து எரிந்தது. அதனால் அவளது அழகிய உருவம் கரிந்தது. அவ்விஷத்தின் வெம்மையினால் அங்கமுழுதும் பலவகைப்பட்ட நோய்கள் கொண்டன. இதற்குள் மாதங்களும் பத்து நடந்தேறின. சுமதி இறைவனருளால் நல்லோரையிலே ஓர் ஆண் மக வைப் பெற்றெடுத்தாள். கொடிய விஷத்தினால் பிடிக்கப் பட்ட அக்குழவியும் தாயும் அளப்பரும் பிணிவாய்ப்பட்டு வருந்தினார்கள். இவர்கள் இவ்வண்ணம் இரவுபகல் ஓயா மல் வாய்விட்டுக் கோவென்று அரற்றுகின்ற ஓசையை அர சன் கேட்டுவருந்திய மனத்தனாய்த் தனது மந்திரியைக்கூவி "எனது அருமைக் குழந்தையையும் அதன் நற்றாயையும் நமது ஆஸ்தான வைத்தியரைக்கொண்டு நோயினின்றும் நீக்குவாய். அவ்விருவரது பிணியையும் தீர்ப்பவர்கள் அள வற்ற பொருளைப் பெறுவார்கள்" என்றனன். அமைச்சனும் அதற்கு உடன்பட்டு ஆஸ்தான வாகடர்களுக்கு ஆஞ்ஞா பித்தான். மந்திரியினது ஏவலின்படியே தேர்ந்த பல வாகடர்கள் வந்து குழுமினர். நோயாளிகள் இருவரையும் பரிசோதித்துப் பார்த்தனர். அவர்களுக்கு அந்நோயின் காரணம் புலப்படவில்லை. வாகடர்கள் என் செய்வார்கள். "இதற்குச் சிகிச்சை தேடாவிட்டால் இத்தனைநாளாக இவ்வரண்மனையில் பிழைத்த பிழைப்புப் போய்விடுமே"

என்று சிந்தித்தவர்களாகி நோயின் காரணத்தையும் அதன் திறத்தையும் அரசனிடங் கூருமலே தங்கள்பாலுள்ள பல உயர்ந்த மருந்துகளைக் கொடுத்தார்கள். அவ்வாறு பிரயோகித்த மருந்துகளினுல் ஒன்றும் பயன்கண்டார்களில்லை. நோயோ மேலிட்டது. அழுகையும் அதிகரித்தது.

இஃது இவ்வாருக, அரசனது மற்றைய மனைவிமார்கள் தங்களது எண்ணமும் செய்கையும் பலியாதது கண்டு மிகவும் மனம் சாம்பினுர்கள். ஆயினும் "முயற்சியுடையாரிகழ்ச்சியடையார்" என்னும் முதுமொழிக் கிணங்க மீண்டும் முயற்சிக்கலாம்; அரண்மனையை விட்டாகிலும் அவர்களை அப்புறப் படுத்தவேண்டும் என்று தீர்மானித்தார்கள். பின்னர் அவர்கள் அவைக்களத்துச் சுகாதாரநிர்வாக அதிகாரியை அழைப்பித்து, அவனுக்கு வேண்டிய பொருள் கொடுப்பதாகவும், சுமதியை அவள் மகவுடன் எவ்விதத்தாலாவது அரண் மனையை விட்டு அகற்றிவிட வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டனர். பணமென்ருல் பிணமும் வாயைத் திறக்கும் என்னும் பழமொழிக் கிணங்க அந்த வாகடனும் அதற் கிசைந்தனன். வாகடன் அரசனை அண்மி, "அரசே! தமது மூத்தமனைவியையும் குழவியையும் வருத்துகின்ற நோயானது தொத்து நோயென்றே கொள்ளக்கிடக்கின்றது. இதைத் தங்களுக்கு அறிவிக்க வேண்டியது என்கடைமை யாகையால் அறிவித்தேன். அவர்கள் அரண் மனையிலேயே இருப்பின் அந்நோய் பலரையும் பற்றிவாட்டும். பிரபுவே! பின்னர் நமது விருப்பம்" என்ருன். அந்தோ அரசன் என் செய்வான்! வாகடன் சொன்ன சொற்களில் தனது அருமைக்

குழவியையும் அதன் தாயையும் அரண்மனையை விட்டு அகற்ற வேண்டுமென்னுஞ் சொல் துவனிப்பதைச் செவியுற்றதும், அருந் துன்பக்கடலுள் அழுந்தினன்: திடரென்று கண்களைப் பெற்று உடனே இழந்த பிறவிக்குருடனது துன்பத்தைக் காட்டிலும் பன்மடங் கதிகமான துன்பத்துள்ளாயினன். அரசனுக்கோ அவர்களை அகற்றிவிட மனமில்லை. நீக்காது விடுக்கிலோ நியாய விரோதம்; சுகாதாரத்திற்குக் கேடுவரும். உலகமும் பழிச் சொற்புகலும். என் செய்வது? விதிவலிது! வினைவிட்டவழியே நடை பெறட்டும் என்று மனத்தை ஒருவாறு திடப்படுத்திக் கொண்டு வைத்தியன் சொற்கு இணங்கினன். உடனே மந்திரி அழைக்கப்பட்டான். சுமதியையும் அவளது குழவியையும் வனத்தே விடுத்து வரும்படி அரசன் அவனுக்குக் கட்டளை இட்டான்.

இக்கட்டளையைச் செவியுற்ற அறிவிற்சிறந்த அமைச்சன், "அரசன் என்செய்வான்? எத்தனைகாலம் அவ்விருவர்களது அழுகுரலையும் செவியுற்றுச் சகித்திருப்பான் ஊழ்வலியை யாவரே கடக்கவல்லார்? முற்றுந்துறந்த முனிவர்க்கும் அது கடத்தலரிதன்றோ? பண்டைவினைப்பயன் யாரை விட்டது? நோயினல் உயிரை யிழப்பார்களோ என்றால் இறக்கின்றதுங் காணோம். இந்நோயானது நீங்கி நல்லுருவத்தை யடைதலுங் காணோம். அவர்கள் வினைப்பயனலேயே இக்கொடிய நோயை அநுபவிக்கின்றனர். நாம் இனி என் செய்யக்கூடும்" என்று பலபல நினைத்து. முடிவில் அரசன் கட்டளைக்குடன்பட்டான். இரதமும் ஆயத்தஞ் செய்யப்பட்டது. மனேவேகத்திலும் விரைந்து செல்லக்கூடிய இரண்டு பரிமாக்களும் பூட்டப்பட்டன. சுமதி

யும் அவளது குழவியும் தேரிலேற்றப்பட்டனர். இரதமோ செலுத்தப்பட்டது. நகரமும் கடக்கப்பட்டது. பண்டு பிராட்டியை இளையபெருமாள் காட்டகத்தே விடுத்தது போல் சுமதியும் அவளது குழவியும் காட்டிடையே விட்டு விடப்பட்டனர். அமைச்சனும் அரசன்பால் சென்று அவர்களிருவரையும் விட்டுவந்த செய்தியைக் கூறினன். இதைச் செவியுற்ற அரசனும் பலவாறு சிந்தித்துத் துன்பக் கடலுளாழ்ந்தான்.

---

## நான்காம் அத்தியாயம்.

கற்களாலும் முட்களாலும் மூடப்பெற்ற அடவியின்கண்ணே விடப்பட்ட சுமதி அவள் குழந்தையோடு ஒருபுறம் சிங்கங்கள் கர்ஜிக்கவும், யானை சப்திக்கவும், புலிகளுறுமவும், பன்றியும் பேயும் பருந்துங் கழுகுந் துன்புறுத்தவும், எப்புறமும் போக வழி காணாதவளாகி வருந்தாநின்றாள். கடத்தற்கரிதாய தனது விதியை நொந்து வெறுக்கலுற்றாள். கண்ணீர் பெருக விம்மிச் சோர்வெய்தினள். தன் முன்பின் நிலைமையை எண்ணியெண்ணித் தனக்குள் பலசொல்லி வருந்தலானள். இப்படி,

* "என்னுவருகி யிருகண்ணி ராலியுகத்
தன்னுத் தழும்பப் புலம்பித் தமியளாய்
மின்னு ரிடைநுடங்கச் செல்வாள் விறல்வேந்தன்"
இன்னு வினைநோக்கி யிறம்பூ தடைந்தனளால்.

நைடதம்.

---

* என்னு—என்று, ஆலி—நீர்த்தாரை, தன்னா—தனது காவு, மின்ஆர்—மின்னலைப்போன்ற, நுடங்க—துவள, விறல்—வெற்றியையுடைய, இன்னு—துன்பத்தைத்தரும்—இறம்பூது—அதிசயம்.

பின்னர்க் கணவனுடைய கொடுமையை நினைத்துத் துன்புற்றாள். தன்னை வருத்துகின்ற நோயைச் சகிக்க மாட்டாமல் அழுகின்ற தனது குழந்தையை மார்போடணைத்துப் பாலூட்டினாள். தானும் தனது பசி நோயைத் தாங்காதவளாகி மெலிந்தாள். இவ்வண்ணம் தனது கழிந்த வாழ்நாட்களை நினைத்துக் கண்ணீர்விட்டழுது சற்றுக்கடவுளிடத்தே மனத்தைச் செலுத்தினாள். இறைவனதருளால் ஒருவாறு மனந்தேறி, "இக்கானகத்தேயே உயிரை விடுவதென்றால் இக்குழந்தையை யாவர் காப்பாற்றுவார்? ஆகையால் நாம் எவ்வித கஷ்டத்துக்குள்ளாகியாவது இக்குழந்தையைக் காத்தலவசியம்'' என்று தனக்குள்ளாகவே சிந்தித்துக்கொண்டு கானகத்தினின்றும் நீங்கினாள். அவ்விடத்தினின்றும் கொஞ்சதூரம் தனது குழந்தையை மார்போடணைத்துக்கொண்டே சென்றாள். மனிதசந்தடி கேட்கலாயிற்று. ஒலி வந்த திசையை நோக்கி நடந்து சென்றாள். எதிரே இருந்த ஒரு பட்டினத்தையடைந்து ஒரு கடைவீதியிற் போகாநிற்கையில், ஆங்குள்ள அதிதனவந்தனான பதுமராகன் என்னும் வணிகனது மனைவியின் தோழி ஒருத்தி இவளைக் கண்ணுற்றாள். கண்ணுற்ற தோழி பின்வருமாறு யோசிக்கலாயினாள்.

இம்மாது ஏதோ அரச குடும்பத்தைச் சார்ந்தவளாக இருக்க வேண்டும். ஆனால் இவளது மேனியோ நோயினாற் பிடிக்கப் பெற்றுக் குன்றியிருக்கின்றது. அம்மாதினை அணுகி விசாரித்துப் பார்ப்போம் என்று அவளை அணுகினாள். சுமதியின் அருகிற் சென்ற தோழி அவளை விளித்து அம்மா ! நீங்கள் யாரோ ? அறியேன். உங்களைப்

பார்த்தால் ஏதோ பெரிய அரச குடும்பத்தைச் சேர்ந்தவர் களாகக் காண்கின்றது. எங்கிருந்து வருகின்றீர் ? எங்குச் செல்கின்றீர் ? இக் குழந்தையோடு உங்களது தனித்தவரு கையின் காரணம் யாதோ ? மேலும் வாடிய முகத்துடன் வருவானேன் ? என வினவினுள்.

இவை யனைத்தையும் செவியுற்ற சுமதி தனது தலை விதியை நினைந்து அறிவிழந்து மெய் சோர்ந்தாள். நெஞ்ச ழிந்து கண்களினின்றும் நீர் தாரைதாரையாகப் பெருக, வாய் விட்டழுதாள். ஒருவாறு தனது பெரு வருத்தத்தை யடக்கிக்கொண்டு அத் தோழியை நோக்கி, "அம்ம! கேள் எங்களது ஊழ்வினையை என்னென்று கூறுவது. தாங்கள் சந்தேகித்தவாறே நான் ஒரு அரசகுடும் பத்தைச் சார்ந்தவளே என்றுரைத்துப் பின் தனது கண வனின் இரக்க மில்லாத செய்கையையும், சககளத்தி களின் கொடுமையையும் பற்றி விவரித்துக் கூறி, அவற்றி னலேயே இத்துன்பமுற்றுக் குழவியோடு இங்கரடைந் தேன்" என்று கூறினுள்.

இதைச் செவியுற்ற தோழி மனம் வருந்தி, சுமதியை நோக்கி "அம்மா! தாங்கள் வருந்தாதீர்கள். தலைவிதி யா ரை விடுத்தது. அயன்முதல் அணுவரையிலுமுள்ள ஜீவரா சிகளுள் எவையேனும் விதியைக் கடந்ததுண்டோ ? அரி ச்சந்திரன், நளன், இராமன், தருமன் முதலிய உத்தம சிகாமணிகளும் வினை வலிக்கிணங்கி அடிமையாகவும், வாகுவனுகவும், வனவாசியாகவும் முறையே இருந்து உயிர் வாழவில்லையா? இனி நீங்களொன்றுக்கு மஞ்சவேண்டாம். சற்று நேரம் இங்கே இருங்கள். இதோ சென்று வருகி

ன்றேன்'' என்று விடை பெற்றுத் தனது எஜமானனுகிய வணிகன்பாற் சென்றுள். தோழி வணிகனை வணங்கி, "ஐயனே! நமது பட்டணத்தே ஓர் அரசமாது தனது மக வுடனே வந்திருக்கின்றுள். அம்மாது ஒருவகைக் கொடிய நோயினுல் வருந்துகின்றுள். அவளது புருஷனுன அரசன் அவளைக் காட்டில் விட்டு விட இங்கு வந்தனளாம். அம்மா தினை நாம் ஆதரிப்பின் நமக்கு நன்மை நேரிடும் என்ப தில் ஐயமில்லை'' என்று கூறினுள். தருமசிந்தையிலும், தியாகத்திலும், நீதியிலும், தயையிலும் தனக்கு ஒப்பாரு மிக்காருமில்லாத பதுமராகன் என்னும் வணிகன் அத்தோ ழியின் சொல்லைக் கேட்டு உளைந்த மனத்தனுய் வெளிப் போந்து தோழியைத தொடர்ந்து சென்று, சுமதியையும் அவள் குழந்தையையுங் கண்ணுற்றுன். அவர்களின் நிலை மையைக்கண்டு வருந்தினுன். சுமதியை விளித்து" அம்மா நீங்கள் எதற்கு மஞ்ச வேண்டாம் தங்களை என்னுடைய சகோதரியாகப் பாவித்தேன்'' என்று முகமன் கூறிச் சுமதியையும் அவளது குழந்தையையும் அழைத்துக் கொண்டு சென்று, ஓர் அந்தணன் வீட்டில் குடி வைத் தான். அவர்களின் அன்னபானுதிகளுக்கு வேண்டிய பொருள்களும் கொடுக்கப்பட்டன. சுமதி அன்றுமுதல் அங்கேயே தனது வாழ்நாளைக் குழவியுடன் கழிக்க ஆரம் பித்தாள். இஃது இவ்வாறிருக்க இவர்களைப் பற்றி வாட் டிய நோயோ நீங்கிற்றில்லை. குழந்தையினுடைய உடலோ அமரபக்ஷத்துச் சந்திரன்போற் குறைய ஆரம்பித்தது. வைசியனும் பல வைத்தியர்களைக்கொண்டு அவர்களது நோயைத்தீர்க்க முயன்றுன். ஆனுல் அவையனைத்தும்

பயனற்றதாயின. குழந்தை, நோயின் அதிகப்பாட்டினால் இடைவிடாமல் அழுது மூர்ச்சையாயிற்று.

---

## ஐந்தாம் அத்தியாயம்.

* கருவினில் மழவில் கங்குற் காலேயில் பருவமாறில்
பெருகியபொழுதில் நோயில் பிரிவினில் பகையில் ஈட்டும்
பொருள்வயின் வேட்டதெய்தாப் புன்மையின் முதுமை [தன்னின்
மருவிய திழப்பில் சாவில் வன்றுயர் மனிதர்க்குண்டே

(தணிகைப்புராணம்.)

புத்திர சோகத்தை யாவரே கடக்கவல்லார். முற்றுந் துறந்த முனிவராகிய வியாசர் கடந்தனரா ? அல்லது இல்லற வாசியான தசரதன் உயிர் வாழ்ந்தனனோ? இவ்விருவர்களின் புத்திரர்களாகிய சுகரும், இராமனும் முறையே ஞான முதிர்ச்சியாலும் பிதுர் வாக்கிய பரிபாலனத்திற்காகவுமே தமது தந்தை தாய் தமர்களை விட்டு நீங்கினர்

---

* கருவினில்—கருப்பவாசம் செய்யுங்காலத்தும், மழவில்—குழந்தைப்பருவத்தும், கங்குல்காலே—இராக்காலத்தும்,பருவம்ஆறில்—ஆறு பருவகாலங்களிலும், பிரிவினில்—ஒருவரை, விட்டுப் பிரியுங்காலத்தும், பெருகிய பொழுதில்—பெருகிச் செல்லும் காலத்தும், பகையில்—பகையுண்டாகும் காலத்தும், ஈட்டும்பொருள்வயின்—பொருள் தேடுமிடத்தும், வேட்டது எய்தாப்புன்மையின்—விரும்பிய பொருளை யடைய முடியாததால் உண்டாகும் துன்பத்தும், முதுமைதன்னில்—தள்ளாத வயதிலும், மருவியதுஇழப்பில்—கைப்பொருளழிந்தகாலத்தும், சாவில்—மரணகாலத்தும், வன்துயர் மனிதர்க் குண்டே—கொடிய துன்பம் மனிதருக்கு உண்டாம்—

கள். சுகரைப் பிரிந்திருக்க மனமில்லாத வியாசர் பித்தங்கொண்டு அலைந்து திரிந்தார். இராமனை விட்டு நீங்க மனமில்லாதவராகித் தசரதர் உயிர் துறந்தார் எனில் பெண்பாலாகிய சுமதியைப் பற்றிக் கூறவும் வேண்டுமோ? புத்திரன் மூர்ச்சையானதைக் கண்டு இறந்துவிட்டான் என்று அளப்பரும் துயரத்துக்குள்ளானாள். வாயில் அடித்துக் கொண்டாள். இடியோசையைக் கேட்டுப் புற்றடங்காவினைப் போன்று கீழே விழுந்து துடி துடித்தாள். புரண்டு புரண்டு அழுதாள். என் செய்வாள்? உடல் பதைத்து எழுந்து வெதும்பி விம்முவாள். தனக்கு நேரிட்ட துன்பத்தை யுன்னிச் சோர்வுறுவாள். ஆருமற்ற பாவியாகிய வெனக்கு இவ் வருந்துயரமும் வருமோ? அந்தோ இனி என் செய்வேன் என்று தனது இருகரங்களாலும் மார்பில் மோதிக் கொள்ளுவாள். அம் பேறுண்ட மயிலைப் போல் மாழ்குவாள். தேம்பித் தேம்பிப் பெரு மூச்சு விட்டு அழுவாள். இவ்வண்ணம் ஓயாது அழுததனால் களைப்புண்டு மூர்ச்சித்துக் கீழே விழுந்தாள். இதைக் கண்ணுற்ற அருகிருந்த அந்தண மாதர்களுட் சிலர் விழுந்தவளை யெடுத்துச் சைத்யோபசாரம் செய்து மூர்ச்சையைத் தெளிவித்துத் தேற்றினார்கள். சுமதி மனந் தேறினளில்லை. அவளை ஆதரித்துவரும் வைசியன் இதைக் கேள்வியுற்று ஓடி வந்து பலவாறு கூறியும் அவள் மனம் தேற்றற் கரிதாயிருந்தது. இஃது இவ்வாறிருக்க, உடல் முழுதும் நீறு பூசி ருத்திராக்கம் பூண்டு காவி வஸ்திரம் தரித்துத் தண்டுகமண்டல தாரியாய் அக்காலை அவ்வழியே பெரியார் ஒருவர் செல்லாநின்றார். ஆண்டு இருந்தவைசியன் அவரைக் கண்ணுற்று அடிபணிந்

தான். அடிபணிந்தவைசியனுக்கு அப்பெரியார் மங்கல மொழிந்தார். மங்கல மொழிந்தஅச்சிவயோகியை நோக்கிச் "சுவாமி ! இக்காலே அடியேனை ஆசிர்வதிப்பதிற்பயனில்லே. இவ்வடிமையால் ஆதரிக்கப்பட்டுவரும் ஒரு பெண்மணியின் துயரை நீக்குதிராயின் அதுவே நுமது மங்கலமொழியான் அடியேன் அடைந்த பலனுகும்" என்று விண்ணப்பித்துக் கொண்டான். அப்பெருந்தகை முனிவரும் அதற்குடன் பட்டனர். இருவரும் சுமதியை அண்மினர். சுமதியும், அடியவரைக் கண்டவுடன் தனது ஆராத் துயரையும் ஒரு புறமொதுக்கி அவரது அடிகளில் வீழ்ந்தனள். வீழ்ந்த சுமதிக்கு அடிகள் அம்மே நீண்ட ஆயுளேயும்திரண்ட செல்வத்தையும் உடையவளாவாய் என்று ஆசீர்வாதஞ் செய்தார். அடிகளது அமிருதம் போன்ற இவ்வாசீர்வாத மொழிகள் துன்பத்திலிருக்குஞ் சுமதிக்கு இன்பந்தாவி ல்லே. ஆனல் வீழ்ந்து வணங்கிய சுமதி எழுந்து முனிவரின் முகத்தைப் பார்த்து " சுவாமி உலகத்தே ஒருவன் அடை யும் செல்வங்களுள் முற்பட்டது மக்கட் செல்வமே. அத்த கைய எனது அருமந்த செல்வமே என்னேவிட்டுச் சென்ற பின்னர்க் கேவலமான பொருட் செல்வத்தையும் விரும்பு வனே ? மேலும் திரண்ட ஆயுளேயும் அருளினீர். அஃது எதற்கு ? இவ்வுலகத்தே தன்னம் தனியாக விருந்து பரத விப்பதற்கோ ? அறிகிலேன்" என்று கூறினுள். இதைச் செவியுற்ற சிவனடியார். " அம்மா ! இதுபற்றி நீ கவலே யுறவேண்டாம். ஒருவர்க்கொருவர் உறவாவது, அவரவர் பூர்வவினேயை அநுசரித்ததென்பதை நீ கேட்டறியாய் போலும். அறிந்திருந்தால் இத்தகைய பிரிவுபற்றி நீ சிறி தும் வாட்டமடையமாட்டாய். அன்றியும்,

* "சாதலும் பிறத்தலுனும் தம்வினைப் பயத்தினுகும்
ஆதலும் அழிவுமெல்லாம் அவைபொருட்கியல்புகண்டாய்
நோதலும் பிரிவுமெல்லா நன்னுணர் வின்மையன்றே
பேதைநீ பெரிதும்பொல்லாய் பெய்வளைத் தோளியென்றான்.
(சிந்தாமணி)

இவ்வுலகத்தில் தோன்றும் அநந்த பொருள்களும் அழியக் கூடியனவே என்பது தெள்ளிதிற்புலனுகின்றவிஷயம். ஆதலால் உன்னை உபாதானகாரண மாகக் கொண்டு உன்னுதரத் துதித்தெழுந்த விக்குமாரனும் இறந்துபட்டான். முடிசார்ந்த மன்னராக விருந்தாலும் முடிவிலொரு பிடி சாம்பராகத்தான் மாறவேண்டும். முற்றுந்துறந்த முனிவர்களாலல்லாது மற்றையோர்களால் ஒருசிறிதும் எமனுடைய காலதண்டத்தைத் தப்பமுடியாது. இவ்வுலகத்தே யாருக்கு யார் துணை ? "அவரவர் வினையின் அவரவர் வருவார்" என்னும் ஆன்றோர் வாக்கினையும் கேள்வியுற்றதில்லையோ ? காலனுகிய பாம்பின்வாய்அகப்பட்டுக்கொண்டுள்ள மனிதர்களாகிய தேரைகளுக்குச் சந்தோஷமுமுண்டோ ? இப்பூமியின்கண்ணே உயிர்களைப் பிரமன் படைக்குங்காலத்தே அவையவைகளின் ஊழ்வினையின் படிக்கே இன்னின்னகாலத்தே இன்னின்ன பலனை யனுபவிக்கவேண்டும் என்று விதித்துள்ளான். மேலும் உயிர்

* அழகிய வளையலை அணிந்துள்ள தோள்களையுடையவளே ! இறப்பும் பிறப்பும் ஜீவர்களின் வினைப்பயனும், வாழ்வும் தாழ்வும் ஆகிய யாவும் பொருளுக்கியற்கை. வருந்துதலும் பிரிதலும் நட்பமாகிய அறிவில்லாமையின் பாலதாம்-பேதையாகிய நீ இவ்விஷயத்தில் மிகவுங் கொடியளாயினை என்று கூறினன்.

நீங்கப்பெற்ற இச்சரீரம் தோலும் எலும்பும் நரம்பும் மாமிச மும் ஈரலும் பித்தநீரும் உதிரமும் சீழும் நிறைத்து வைத்த ஒரு குடமானது உடைந்ததுபோலாகும். நீ புலம் புவது இறந்த இச்சரீரத்துக்கா? எதற்கு? என்று பலவாறு கூறித் தேற்ற முயன்றார். இவையனைத்தையும் செவியுற்ற சுமதி சிவயோகியைப் பார்த்து "சுவாமி எப்போது என் கணவர் என்னையும் இவ்வரிய தவங்கிடந்து பெற்ற பிள்ளை யையும் காட்டில் விடுத்தனரோ, அப்போதே யான் இறந்து பட்டிருக்கவேண்டும். இதுகாறும் யான் உயிருடனிருந்த தன் காரணம் இக்குழந்தையேயாகும். அதுவும் இறந்து பட்டது. இனி வாழ்ந்திருத்தலினும் சாதலே நன்று. உயி ருடனிருந்து என் செய்யப்போகின்றேன்" என்று ஒரே பிடிவாதமாகக் கூறினாள். முன்னரேயே நாம் இக்குழந்தை இறந்ததுபோல் மூர்ச்சையாயிற்றென்று படித்திருக்கின் றோம். இப்பெரியாரும் அது மூர்ச்சித்திருக்கின்றது என்ப தறிந்திருந்தும் பின்னர் ஆகவேண்டிய காரியத்தை உன்னி, குழவி இறந்ததென்றே போலியாக நடித்து அவளுக்கு யாக்கை நிலையாமையைப்பற்றிக் கூறினார். முனிவர் அறி யாததும் உளதோ?

மீண்டும் அப்பெரியார் சுமதியைப் பார்த்து "அம்மா! இப்பாலகன் உயிர் பெற்றாலன்றி நீ உயிர் வாழேன் என்று கூறுகின்றனை. ஆதலால் கடவுளருளால் இக்குழவியின் நோயைத்தீர்த்து மூர்ச்சையைத் தெளிவிக்கின்றனன்" என் றார். பெரியோர் மனம்வைத்தால் எக்காரியம் முடிவுபெறாது. பவக்கடலினின்றுங் கரை ஏறித் தவக்கடலிற் சஞ்சரிக் கின்ற இப்பெரியார், கடவுளின் திருநாமத்தைக் கூறித்திரு

நீறு எடுத்துக்குழவியின் மீதுபூசினர். பூசின உடனே குழந்தை துயில் நீத்தெழுந்ததுபோல எழுந்தது. தாயைத் தாவிக் கட்டிக்கொண்டு பாலுண்ண ஆரம்பித்தது. இதைக் கண்ணுற்ருள் சுமதி. இப்போது சுமதியின் மனநிலைமையைக் கூறவும் வேண்டுமோ ? பிறவிதொட்டு வறுமை வாய்ப்பட்டு வருந்துமொரு ஏழை கண்டெடுத்த புதையலேஉடனே யிழந்து மீண்டும் பெறின் எவ்வாறு சந்தோஷமுறுவானே அவ்வாறே சந்தோஷக் கடலுள் மூழ்கினள். "கற்பகத்தருவைச் சார்ந்தகாகமும் அமுதம் உண்ணும் "என்னும் முதுமொழிக்கிணங்க, சுமதி அப்பிள்ளையைப் பெற்ருளாகையினல் அவளது நோயையும் நீக்கக்கருதிக் கொஞ்சம் நீறெடுத்து அவளது தேகத்தும் பூசினர்.

பரிசன வேதி பட்டவுடன் கரும்பொன் செம்பொனுக மாறுவது போன்று சுமதியின் தேகம் பிணியினின்றும் மாறிப் பழைய நிலைமையையடைந்து பொன்னிறம் போன்று ஒளிவீசியது. இருவரும் பிணியினின்றும்விடுபட்டுச் சுகமடைந்தனர். சுகமடையவே சுமதி முனிவரை நோக்கி, முநீந்திரரே! அஞ்ஞானிகளாயும் பரதந்திரர்களாயுமுள்ள நாங்கள், தங்கள் போன்ற ஞானியும் சுதந்திருமான மகாபுருஷருக்குயாது கைம்மாறு செய்யவல்லோம் ? என்று கூறி அவ்வடிகளின் அடிபணிந்து வணங்கினள். வணங்கின சுமதியை வாரியெடுத்து " நீயாதுக்கும் அஞ்சவேண்டாம், இப்பிள்ளையை இன்றுமுதல் பத்திராயு என்று பெயரிட்டு அழைப்பாயாக. நினதுதிருக் குமாரன் அளப்பரும் செல்வத்தையும் நல்ல அரசியலேயும் தக்கவயதில் அடைவான். நின்குமரன் வயதுக்கு வருகின்றவரைபி

லும் இப்போது ஆதரித்து வரும் வணிகனே உன்னையும் உன்குழந்தையையும் ஆதரிப்பானாக" என்று ஆஞ்ஞாபித்துவிட்டுப் பத்திராயுவுக்கு இன்னும் சில சங்கதிகளையும் கூறிவிட்டு விடபயோகி தமது இருப்பிடஞ் சென்றார்.

---

## ஆறாம் அத்தியாயம்.

* "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்." (திருக்குறள்)

ஊழ்வினையைக் காட்டிலும் ஒருவனை விடாது பற்றித் தொடர்வது வேறொன்றுமிலது. பழைய வினையை வெல்லக் கூடியமக்கள் ஒருவருமே கிடையாது. வினைப்பயனை வெல்வதற்கு வழி எவ்வகைத்தான நூலினுங் கிடையாது. அவரவர்கள் செய்தவினையை அவரவர்களே யனுபவித்துத் தீர்க்கவேண்டும். ஊழ்வினைப் பயனால் இந்திராதி தேவர்களும் இடருற்றார்களென்றால் நம்போன்ற மக்களைப் பற்றிக் கூறுவானேன். ஒருவன் எத்தகைய முயற்சியினைச் செய்தாலும் அவனது வினை தான் முந்துற்றுநிற்கும். நிற்க, முன்னம் மந்திரன் என்ற அந்தணனோடு கூடியிருந்து விடபயோகியாகிய தவசிரேஷ்டருக்கு உபசரித்து உதவிய பிங்கலை யென்னும் கணிகை மாதின் செய்தியைக் கவனிப்போம். அக்காலத்தே நிடதநாட்டினை மநு நெறி தவறாமற்படி சந்திராங்கத னென்னும் அரசன் பன்னெடுங் காலம் அரசுபுரிந்து வந்தான். அவ

---

* மற்றொன்று—பகையாவதோருபாயத்தை, ஊழ்—வினை, முந்துறும்—முற்பட்டு நிற்கும்.

னது கற்பிற்சிறந்த மனைக்கிழத்தியின் பெயர் சீதிந்தனி. இவ்விரு தம்பதிகளும் புத்திரப் பேறுஇல்லாமற்படிக்கு நெடுநாள் அரியதவங் கிடந்தார்கள். அவ்விருவர்களின் தவப் பயனாகப் பிங்கலை யென்பாள் பெண் மகவாகத் தோன்றி னாள். சந்திராங்கதன் அப்பெண் மகவுக்குச் செய்ய வேண் டிய சடங்குகளைச் செய்து கீர்த்திமாலினி என்னும் திருப் பெயரிட்டு, அம்மகவை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்துவந்தான். கணிகைமாதாகிய பிங் கலை ஓர் இராப்பொழுது ஒரு பெரியாரை ஆதரித்ததன்பய னாக ஒரு அரசகுமாரியாக இப்போது பிறந்திருக்கிறாள். மானவர்கள் தமது வாழ்நாட்களைப் பெரியோர்களது பணி க்கே ஆளாக்குவார்களானால் அன்னார் எத்தகைய பேற்றினை யடைவார்கள் என்பதைப் பிறர் கூறாமலேயே அறியலாமன் றோ? இஃது இவ்வாறிருக்க இனி சுமதியையும் அவளது குமாரன் பத்திராயுவையும் ஒரு கருணைக்கடலாய வணி கன் ஆதரித்துவருகின்றான் என்று முன்னர் படித் தோமல்லவா ? அவ்வணிகனுக்கு ஓர் அருமந்த பிள்ளையுண்டு. அவன் பெயர் சுனையன். பத்திராயு வும் சுனையனும்தோழமைகொண்டு வித்தியாதரரைப்போல வீணை வகைகளையும், வேதியரைப்போல் வேதமுதலாய அறுபத்துநான்கு கலைகளையும் ஐயந் திரிபறக் கற்று அரச ருக்கு வேண்டிய வில், வேல், வாள், கதை முதலிய படைக் கலப் பயிற்சியிலும், யானையேற்றம், குதிரையேற்றம் முத லிய படைப்பயிற்சியிலும் வல்லுநரானார்கள். இவ்வாறு சுனையனும் பத்திராயுவும் உடலும் உயிரும், மலரும் மண மும்போல ஒருவரையொருவர்விட்டு நீங்காமற்படி நேசித்து

வந்தார்கள். இவர்களிருவரும் நூல்வினைக் (உபநயன சடங்குக்)கேற்ற பருவத்தினை யடைந்தார்கள். வைசியனும் பெரியாரைக்கொண்டு நல்ல ஓரையிலே வேதவிதிப்படி நூல்வினையை முடித்துவைத்தான். ஆண்டுப் பலவகைத்தான தானங்கள் வழங்கப்பெற்றன. அந்தணர் ஆசிகள் கூறப் பாவையர்கள் பல்லாண்டிசைத்தனர். நண்பர்களிருவரும் உபநயனம் செய்யப்பட்டவர்களாய் அஸ்திரம், சஸ்திர முதலிய கலைகளை இடைவிடாமற் பயின்று வந்தார்கள். ஒருநாள் இவ்விருவர்களும் அருகேஇருந்த ஒரு நந்தன வனத்தையடைந்து ஒரு குளக்கரையிலமர்ந்து அங்கேயுள்ள காட்சிகளைக் கண்ணுற்றிருந்தனர். இவைகளைக் கண்ணுற்ற பத்திராயு சுனையன் என்பவனை நோக்கி "நண்பா! உலகத்தே மனிதர்கள் ஒருவருக்கொருவர் கிஞ்சித்து உபகாரம் செய்வார்களாகில் பிரதி உபகாரத்தைப் பெறும்வரையும் மற்றவரைப் பலவாறாக இகழுகின்றனரே! இந்நந்தவனத்தை நோக்குமிடத்து இதிலுள்ள அநந்த புற், பூண்டு, செடி, கொடி, காய், கனி, விலங்குகள் கடவுளாலன்றோ படைக்கப்பெற்றன? இறைவன் இவைகளை எதன் பொருட்டுப் படைத்தார்? எல்லாம் மக்கள்மாட்டுள்ள கருணையினாலன்றோ? மக்கள் ஏதாகிலும் அவருக்குக் கைம்மாறு செய்கின்றனரா?" என்று கடவுளினது கருணைவிசேஷத்தைப்பற்றி வியந்துகொண்டிருந்தான். அப்போது நீண்ட சடைமுடியர், திருநீற்று மேனியர், காஷாய கோலத்தர் ஆகிய ஒரு பெரியார் ஆலவாய் எம்பெருமானே வருவதுபோன்று, இருவரும் அமர்ந்திருக்கும் குளக்கரையை நோக்கிவருவதைக் கண்ணுற்றார்கள். கண்ணுற்றதும் திடுக்கிட்டெழுந்து எதிர்சென்று அடிபணிந்து வணங்கி, அடி

கள் ! தேவரீரது வரவு நல்வரவாகுக! தங்களைத் தரிசித்த எங்களின் தவமே தவமாகும். தாங்கள் நெடுந்தூரம் நடந்துவந்ததால் சோர்வடைந்ததாகக் காணப்படுகின்றீர். அடியேங்கள் குடியிருக்கும் குடிசிலுக்கு எழுந்தருளல் வேண்டும். அங்கே தங்கித் தங்களது இளைப்பை யாற்றிச் செல்லலாம். ஏழைபால் கருணை புரிவீராக!'' என்று பன் முறையும் வேண்டினுர்கள். அடிகளும் அவர்களின் வேண்டுகோளுக் கிசைந்தவராகி யவர்களிருவரையும் பின் தொடர்ந்து பத்திராயுவின் இல்லத்தை யடைந்தார். தன் குமாரனுடன் போந்த முனிவரைக் கண்ணுற்றதும் சுமதி திடுக்கிட்டெழுந்து ஓடி எதிர்கொண்டழைத்து ஆசனத்தி லமர்த்தி அடிபணிந்தாள். ஆனந்தக்கண்ணீரினு லவரது உபயபாதங்களையுங் கழுவினுள். எழுந்தாள், வணங்கினுள். அன்பே சிவமென்றுணர்ந்த சிவயோகியினது மனம் மகிழ்ச்சியடையும்வண்ணம் நறுந்தேனெடு கலந்த வாழை, மா, பலா முதலிய கனிகளைக்கொண்டு உண்பித்தாள். நீம்பாலைச் சீனியிட்டுப் பருகச் செய்தாள். இவ்வாறுபசரித்த சுமதியையும் பத்திராயுவையும் அந்தணர் நோக்கி தாயும் தனயனுமாகிய நீங்கள் கடவுளருளால் சுகித் திருக்கின்றீரா ? நற்குண நற்செய்கையுடைய எவர்க்கும் கடவுள் கிருபை செய்வார் என்று பலவாறு அவர்களுக்கு முகமன் கூறி, அவர்களால் அளிக்கப்பட்ட உணவையுண் டார். உண்டு மீண்டும் களிகூர்ந்து பத்திராயுவை நோக்கி "பத்திராயு ! நீ கற்கவேண்டிய கலைகளனைத்தையும் கற்றனையோ? குருபத்திசெய்கின்றனையோ?'' என்று வினவினுர். இவ்வாறு தனது குமாரனை வினவிக்கொண்டிருந்த விடப

யோகியைச் சுமதி நோக்கி வணங்கி, "ஓ முனிவரே! தவச்சிரேட்டரே! உலகில் ஒருவன் வாழ்நாள், இடையறாது செல்லுங்காலத்தினைப் பொருள் வகைபாற் கூறுபடுத்துங் கூற்றுவன்பாற்சென்ற உயிர், மீண்டதைக் கண்டிலோம் கேட்டிலோம். காலனுடைய காலதண்டத்தினின்றும் தப்பினர் ஒருவருமிலர். அவ்வாறுமீட்கச்சிரித்துப் புரமெரித்த சிவனலன்றி மற்றெவராலு மியலாது என்பது திண்ணம். மிருகண்டுவின் மைந்தனை மார்க்கண்டேயனைப் புழுக்காலனது பாசத்தினின்றும் விடுவிப்பான்வேண்டிச் சிவனே அவனோடு யுத்தஞ்செய்தாரென்றால் என்போன்ற மானிடப்பெண்ணால் ஆவது யாது? முழுமுதற்கடவுள் செய்தவண்ணமே முனிவராகிய தாங்களும் என் அருமந்த பிள்ளையினுயிரைக் கொடுத்தருளினீர். உயிரைக் கொடுத்த உத்தமரை யாங்கள் யாண்டும் மறக்கற்பாலோம் அல்லோம். தேவரீர் அளித்த பிச்சையால் பிழைத்திருக்குமிக் குமரனைத் தேவரீரே அடிமையாக ஆட்கொள்ளல்வேண்டும். ஆணவமேலிடாவண்ணம் அவனுக்கு வேண்டிய அரசியலையும் ஞானத்தையும் அருளிச் செய்யவேண்டுமென்று வேண்டிக் கொண்டாள்.

---

## ஏழாம் அத்தியாயம்.

* குடிதழீஇக் கோலோச்சு மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கு முலகு. (குறள்)

---

* உலகு—உலகத்தார், குடிதழீஇ—குடிகளை அணைத்து, கோலோச்சும்—செங்கோலைச் செலுத்தும், மாநிலமன்னன்—பெருநில வேந்தனது, அடிதழீஇ—அடியைப் பொருந்தி, நிற்கும்—விடாது நிற்பர்.

உலகின்கண்ணே மக்களைப் படைத்து அவர்களுள் அந்தணன் அரசன் வணிகன், வேளாளன் என்னும் கருமப் பிரிவினை உண்டாக்கி வகுத்த, முழுமுதற்கடவுளே அரச னாகத் தோன்றியும் மக்களை அறநெறி வழாது ஆளுகின் றனர் என்பது மறைவிதியன்றோ ? அரசனது செங்கோல் திரிந்தால் வேதவிதிகள் திரியும், மாதர்களது கற்பும், இல் லற ஒழுக்கமும் பிறழ்ந்து கேடுறும்; இல்லற ஒழுக்கம் பிறழ்ந்தால்பசிகடுகிவருந்தச் செய்யும். பிணிமலிந்துஇடர்ப் படுத்தும். பகைமையதிகரிக்கும். மழைவளங்குறுகிப் பயிர் வளங் குன்றும். ஆதலால் அரசர்கள் இவ்வுலகைப் பாதுகாத்தலின் பொருட்டுத்தேவர்களின் கடமைக் கடப்பதில்லை. பெரியோரிடத்து யாதொரு குற்றமுஞ்செய்வ தில்லை. தருமசாஸ்திரங்களை யாராய்வார்கள். நாவினலந் தவ றித் தவறுனவைகளை யுரையார்கள். விஷய இச்சையாகிற பெருங் கடலில் மூழ்கார்கள். தங்களுக்கு எவ்வளவு ஆற் றல் இருந்தபோதிலும் தங்கள் குடிகளுக்கு மாறுனவை களைச் செய்தற்கு மனந் துணியார்கள். அவர்களுக்கு வேண்டியவைகளைச் செய்தற்கு இணங்குவார்கள். சூது விரும்பார்கள். துஷ்டரைக் கொல்லுவார்கள். சிஷ்டரை யாதரிப்பார்கள். வஞ்சகரைக் கடிவார்கள். பழியை யஞ்சு வார்கள். தாக்ஷண்யம் பாரார்கள். செய்ந்நன்றி மறவார்கள். அமைச்சர் முதலியோர் இடித்துச் சொல்லும் புத்தி யைக் கேட்குமரசனே உலகமுழுதையும் ஆள்வான். இக்கொள்கையினை யவர்கள் உறுதியாகக் கொண்டவர்க ளாவார்கள். இத்தகைய மரபைக்கொண்டே மன்பதைகளை அநேக அரசர்கள் ஒருகுடைக்கீழ் ஆண்டு இன்புற்றூர்கள்.

பலவகைத்தான யாகாதி கிருத்தியங்களைச் செய்து இந்திர லோகத்தையடைந்து அரம்பாஸ்திரீகளுடன் இருக்கின்றார்கள். ஓ அரசிளங் குமரனே! எல்லாம்வல்ல கடவுளின் திருவடிகளையே துணையாகக்கொண்டும், அரசியல் பிழைத்தோர்க்கு அறமே கூற்றாகும். இன்ன நியாயங்களை உள்ளத்திற்கொண்டு நீ அரசாளக்கடவை" என்னும்நீதிகளையும் மற்றும் வேண்டியவற்றையும் எடுத்துக் கூறித் தமது பேச்சை முடித்தார். பத்திராயுவும் இவ்வுபதேசத்திற்கிசைந்தான்.

மீண்டும் அவன் விடபயோகியை வணங்கி, "அரசியலுரைத்த அந்தண சிரேட்டரே! இந்நிலையற்ற உலகுக்கேற்ற நிலையற்ற இன்பமனுபவித்தற்கான முறைகளையுபதேசித்தருளிய தாங்களே என்றும் அழியாததும், நிலைபேறுடையதுமான இன்பமாகிய பரலோக வாழ்க்கைக்கு உரிய சாதனங்களை அருளுவீராக" என்று இரந்து கேட்டான். இதைச் செவியுற்ற முனிவர் ஆநந்தக் கடலில் மூழ்கியவராகி அவ்வரசிளங் குமரனை நோக்கி "அரசரேறே! உன்னிடம் யாம் மனமுவந்தோம். இப்பூமியின் கண்ணே அநேகமாக ஒவ்வொரு ஆடவரும், இகலோக இன்பம் நிலையற்றதெனத் தெளிவாய்த் தெரிந்திருந்தும் அதையே அடைந்து அனுபவிக்க விரும்புகின்றனர். அவ்வாறிருக்க நீமாத்திரம் நித்தியானந்தசுகத்தை யளிக்கும் பரலோகத்தை அடைய விரும்புகின்றனை. அதை நீ விரும்பியவாறே பெறக் கடவை" என்று அருள் சுரந்து ஆசீர்வதித்தார். பத்திராயுவுக்கு, போரில் தன்பகைவரை வெல்வதற்கான பெரும் ஆற்றலையும் ஒருவாளையும்,

கோடிசூரியப் பிரகாசம் பொருந்திய ஒரு சங்கத்தையும் கொடுத்துவிட்டுத் தம் வழிமேற் சென்ருர். பத்திராயுவும் விடபயோகியாது உபதேச மொழிகளைப் பொன்னே போற் போற்றித்தனது தோழனை சுனயன் என்னும் வணிக புத்திரனேடு குதூகுலமாகக் காலங்கழித்து வந்தான.

---

## எட்டாவது அத்தியாயம்

நீர்வளம் பொருந்தி நிலவளம் பொலிந்து விளங்குமிப் பாதகண்டத்தே மாந்தர்கள் புகழும் மகததேயம் ஒன்று உண்டு. ஒப்பாரு மிக்காருமற்ற எமத்தேரினன் என்னும் அரசன் அத்தேயத்தை ஆண்டுவந்தான். இவன் தனது குடிகளை அன்போடு பாதுகாக்கின்றவன். கல்வியிற் சிறந்து வீரத்திலுயர்ந்தவன். இவ்வரசன் ஒருநாள் திடீரென்று தனது குலப்பகைவனை வஜ்ஜிரவாகுவின் செல்வவளப் பத்தைக் கண்டு பொருமை கொண்டு, அவனைப் போரில் வென்று பொருளைக் கவரவேண்டும் என்று சிந்தித்தான். பொருமை கொடியதல்லவா! தன்னை நேசித்தவரையே அது பிரதமத்தில் இரவும் பகலும் செல்லரிப்பதுபோல் அரித்து வருமென்பதை நாம் அனுபவ சகிதமாகக் கண்டு வருகிருேம். ஆகையால் அறிவாளர் எக்காலத்திலும் இதை அகற்றியே வைத்திருப்பர். எமத்தேரினன் குணபூஷணனு யிருந்தும் இதற்கிடங் கொடுத்தது ஊழின் வன்மைத் திறத்தாலேயாம். "சூழ்வினை நான்முகத் தொருவற் சூழி னும் ஊழ்வினை யொருவரால் ஒழிக்கற்பாலதோ?" ஆகவே, எமத்தேரினன், தனது சேனைத்தலைவனை யழைத்துப்

படையைச் சித்தப்படுத்தச் சொன்னான். அவ்வாறே நால் வகைச் சேனையும் தயாரிக்கப்பட்டன. அரசன் போர்க் கோலங்கொண்டு தேரிவர்ந்து பதினாயிரம் சேமத்தேர்கள் சூழ்ந்துவரத் தசானன நகரத்தைநோக்கிப் புறப்பட்டான். அவனது சேனைகள் செல்லும் வழிகள்தோறுமுள்ள கிரா மங்களைக் கொள்ளைகொண்டும், பாக்கங்களைப் பாழாக்கியும், நீர்த்துறைகளைத்தூர்த்தும், ஆண்பெண்பாலாரைச் சிறைப் படுத்தியும், ஆங்காங்குள்ள ஆனிரைகளைக் கவர்ந்தும், வழிகளை அடைத்துஞ்சென்றனர். இவ்வாறு ஏமத்தேரி னன் தனது சதுரங்கசேனைகளும் புடைசூழத் தசானன நகரத்தையணுகி அந்நகரத்தின் எல்லையை வளைத்துக் கொண்டான். இச்செய்தியை மனைவிமார்களுடன் களித் திருந்த வஜ்ஜிரவாகு ஒற்றரால் தெரிந்து படையை ஆயத் தஞ்செய்யச் சொன்னான். சேனைத்தலைவன் நான்குவகைச் சேனையையும் இரண்டு வாம்பரிகளைப் பூட்டிய ஒரு தேரை யும் ஆயத்தஞ்செய்து அரசனுக்கு அறிவித்தான். வஜ்ஜிர வாகு போர்க்கோலங்கொண்டு தேரிவர்ந்து சேனைகள் பின் தொடரப் பகைவனை நோக்கிச்சென்று நகரின் புறத்தை யடைந்தான். இருபுறத்துச் சேனைகளும் இருபெருங் கடல்கள் ஒன்றையொன்று எதிர்த்ததுபோல் தோன்றிக் காண்போர்மனதைக் கலக்கின. கார்காலத்து இடிமிகுந்த மேகக் கூட்டங்களைப்போல் யானைக் கூட்டங்கள் பிளிறிக் கொண்டு சென்றன. எதிர்ப்படின் மலைகளையும் பொடி படச்செய்யும் வன்மையினையுடைய தேர்கள் பல வானமளா விய கொடிகளுடன் சென்றன. காற்றினும் கடிதாகச் செல்லும் வேகத்தையுடைய பல இவுளிகள் அணிஅணியா

கச் சென்றன. கண்கள் சிவக்கப் பற்களை நரநரவென்று கடித்துக்கொண்டு பூமி அதிரும்படி காலாள்வீரர்கள் ஆர்த்துச் சென்றனர். இருபுறமும் பலவகைகளாகிய போர்முரசங்கள் ஒலித்தன. சங்குகள் ஆர்த்தன. போர் தொடங்கியது. தேரோடு தேர் செறிந்தன. யானைப்படைகளோடு யானைப்படைகள் நெருங்கின. குதிரைப்படைகளோடு குதிரைப்படைகள் எதிர்த்தன. பதாதிகளைப் பதாதிகள் எதிர்த்துக் கடலொலியினும் மிக்கு ஆர்த்தார்கள். வேல்களை வேல்கள் தாக்கின. பெரிய வாள்களை வாள்கள் தகர்த்தன. அம்புகள் பல ஆகாயத்தே கிளம்பிப் பறைவைகள் போல் சண்டையிட்டன. படைத்தலைவர்களைப் படைத்தலைவர்கள் தாக்கினார்கள். வீரர்களை வீரர்கள் எதிர்த்தார்கள். முடியிழந்தவர்கள் பலர். அடி இழந்தவர்கள் அனேகர். சில ஆண்மையிற்சிறந்த வீரர்கள், தங்கள் தங்கள் கையிலுள்ள அம்புகளெல்லாம் ஒழிந்துபோகத் தங்கள் மெய்யில் தைத்துள்ள பகழிகளைவாங்கிப் பகைவர்களை வதைத்தனர். எங்கும் பிணமலைகள் குவிந்தன. குதிரைத்தலைகள் நிறைந்தன. கரிக்குலங்கள் மலைபோல் செறிந்தன. கடைசியில் இருபெரு வேந்தரும் ஒருவரை யொருவர் எதிர்த்தார்கள். சிங்கங்கள் ஒன்றோடொன்று சீறுவதுபோல் ஒருவரையொருவர் சீறியார்த்தார்கள். வில் வாள் கதை முதலிய அஸ்திரசஸ்திரங்களைப் பிரயோகித்தார்கள். இவ்வாறு ஒருவரையொருவர் எதிர்த்துத் தனித்துப்போர் செய்து கொண்டிருக்குந் தறுவாயில் ஏமத்தேரினனது மைந்தர்கள் எஞ்சிநின்ற வஜ்ஜிரவாகுவின் சேனையை முறியடித்து அவனையும்

சிறைப் படுத்திக் கைகால்களுக்குத் தளை யிட்டார்கள் அத்துடன் விடாமற் தமது பிதா எமத்தேரினது தேர்க்காலில் கட்டிவிடுத்து இன்றோடு நமது குலப்பகை முடிந்தது என்று ஜெயபேரியடிக்கச் செய்தனர். இஃது இவ்வண்ண மிருக்க இனிப் பத்திராயுவைக் கவனிப்போமாக.

பத்திராயுவும் அவன் தோழனான சுனையனும் தங்களிருப் பிடத்திற்கு அருகிலுள்ள கானம் சென்று வேட்டையா டிக் காலங்கழிப்பது வழக்கம். அவர்களிருவரும் ஒரு நாள் வழக்கம் போல் அக்காட்டில் வேட்டையாடிக் கொண் டிருக்கும் தருணம் காவியுடையோடுந் திரிதண்டத்தோ டும் பெருமூச்சு வாங்கத் தலைவிரி கோலமாகச் சில சந்நியாசிகள் ஓடி வருவதைக் கண்ணுற்றனர். வேட் டையாடுவதை நிறுத்தி அரசகுமாரன் அந்தச் சந் நியாசிகளை நோக்கி "ஐயன்மீர் நீங்கள் அனைவரும் பெரு மூச்சு வாங்கத் தலைவிரிகோலமாக ஓடுவானேன்? உங்க ளுக்கு வந்துற்ற இடர் யாது?" என்று வினவினான். அதற்குச் சந்நியாசிகள் "பட்டுக்கோட்டைக்கு வழி யாது என்றூர்க்குக் கொட்டைப்பாக்கு பத்துப் படி' என்பது போல் அரசகுமாரனைப் பார்த்து நீ ஏன் எங்களை விசாரிக் கின்றனை? நாங்கள் சந்நியாசிகள் தான் என்றனர். பின்னைச் சந்நியாசியல்லாமல் சைநியத்திலுள்ளவர்களா? என்றனன் அரசகுமாரன். சந்நியாசிகளின் அடிவயிற்றில் நெருப்பு விழுந்ததுபோலிருந்தது. ஒருவரை ஒருவர் பார்க்க ஆரம் பித்தனர். இவன் எப்படியோ நம்மைக் கண்டுகொண்டான் போலும். இவனிடம் இனி ஒளிக்க இயலாது. ஒளிப்போ மாயின் தலைக்கே தீங்கு நேரிடும். உண்மையைச் சொன்ன

னும் உயிர் பிழைத்துப் போகலாம் என்று தங்களுக்குள்ளாகவே சிந்தித்துச் சொல்லத் துணிந்தனர். பத்திராயுவை நோக்கி "ஐயனே! சொல்லுகின்றோம். உண்மைக்கு எப்பொழுதும் அழிவில்லையென்பது அனைவரும் ஒப்புக்கொள்ளத்தகுந்த விஷயம். உள்ளதை உரைத்தால் உதவியாகினும்பெறலாம்" என்று கூறினர் சந்நியாசிகள். "இது என்ன விந்தையாக விருக்கின்றதே. எதோ நீங்களே ஆசேஷப சமாதானங்களோடு பேசிக்கொள்ளுகின்றீர்களே. உண்மையை உரையுங்கள், ஆபத்துஒன்றும் வராது" என்றனன் பத்திராயு. "அவ்வாறே ஆபத்து ஒன்றுமில்லையென்று வாக்குறுதி செய்வீராஞல் உற்றதைக் கூறுகின்றோம் என்றனர் சந்நியாசிகள்." அரசிளங்குமாரனும் அவ்வாறேயாகுக. "நீங்கள் யாதொன்றுக்கும் அஞ்சவேண்டா. உற்றதை உரையுங்கள்"என்றனன். சந்நியாசிகள்அண்ணலே யாங்கள் அறவோரல்லர் என்றனர். மற்று நீங்கள் மறவரோ? என்றனன். அரசன் அதற்கு ஐயா தாங்கள் எப்படியோ எங்களைத்தெரிந்துகொண்டீர். தங்களைப்போன்ற குறிப்பறிவாரும் இவ்வுலகத்திலுள்ளார்கொலோ. அடியேங்களது வரலாற்றைக்கூறுகின்றோம்? சற்றுச் செவிசாய்த்து எங்களையும் அடியேங்களைச் சார்ந்தவர்களையும் காப்பீராக. யாங்கள் தசானன நகரத்துப் போர்வீரர்கள். எங்களுரைப் பாழாக்கி விடுத்து எங்களிற் பலரையும் மூண்டபோரிற் கொன்று வீழ்த்தி எங்கள் அரசராகிய வஜ்ஜிரவாகுவையும் சிறைப்படுத்திக் கைகால்களுக்குத் தளையிட்டு அவரைத் தேர்க்காலில் கட்டிக் கொண்டு செல்லுகின்றான் மகததேசாதிபதியாகிய ஏமத்தேரினன் அடியேங்கள் போர்க்களத்தில் ஓடும் குருதி வெள்ளத்தில்

எங்களது பழைய வஸ்திரங்களை நனைத்துக் காவிபோல் உடுத்திக்கொண்டும், அங்குப் போர்க்களத்தில் முறிந்த விற்கழுந்துகளை எடுத்து மும்மூன்ருகப் பிணித்து அதன் நுனியில் இக்காவிவஸ்திரத்தில் கொஞ்சம் கொடியாகக் கட்டி நாலவிட்டுக்கொண்டும், கேட்போர்க்கு யாங்கள் திரிதண்ட சந்நியாசிகளென்று சொல்லிக் கொண்டும் இத்தனை தூரம் உயிர் பெற்று ஓடிவந்தோம்'' என்று நவின்றனர்.

சந்நியாசிகள் நவின்றது பத்திராயுவுக்குச் செவியில் நாராசம் காய்ச்சிவிட்டதுபோலிருந்தது. மனந் தளர்ந்து வருந்தித் தனது தோழனை சுனையனோடு பின்வருமாறு கூறத் தொடங்கினன். ''வஜ்ஜிரவாகு மன்னன் என் தந்தை. அவர் மகாவீரர். சத்தியம் தவருதவர். பெரிய வில்லாளி. மநுமுறை வழாத செங்கோலர். ஏதோ எங்கள் ஊழ்வினைப் பயனுலும் எனது சிற்றன்னைகள் செய்த சதியி னுலும் எங்களைக் காட்டில்விடுத்தனர். எனதுயிரையளித்த உத்தம விடபயோகியர் பலதடவைகளிலும் இவ்விஷயத் தை என்னிடங் கூறியுள்ளார். அத்தகைய பெருமையினை யுடைய மகாவீரருக்கும் இத்தகைய இடையூறு வரலாமோ? தலைவிதி யாரை விடுத்தது. உலகத்தினது இருளைப்போக்கி முதன்மைப் பொருளாய் விளங்குகின்ற இரு சுடர்களும் இராகு கேதுக்களால் இடருறுத்தப்படுகின்றன என்ருல் இறைவனருளின்றித் துரும்பசைக்கவும் அசக்தராயிருக் கின்ற மக்களைப்பற்றிக் கூறுவானேன்'' என்று பலவாருகப் பிரலாபித்துவிட்டுச் சந்நியாசிகளாக வந்த படைவீரர்களை நோக்கி ''வீரர்களே நீங்கள் யாதொன்றுக்கு மஞ்சவேண்டுவ

நில்லை. உங்கள் அரசனுகிய வஜ்ஜிரவாகுவை இப்போதே விடுவிக்கின்றேம். நீங்கள் உங்களிடஞ் செல்லுங்கள்'' என்று விடைகொடுத்தனுப்பிவிட்டு இனி ஆக வேண்டிய காரியத்தைப் பார்க்கலானுன்.

---

## ஒன்பதாம் அத்தியாயம்

* ஒட்டார்பின் சென்றெருவன் வாழ்தலின் அந்நிலையே
கெட்டா னெனப்படுதல் நன்று. (குறள்)

இப்பூமியின்கண் நல்லகுடியிற் பிறந்தார்க்கு உரியன வாகிய குணங்களுள் தலைநின்றது மானமே. எஞ்ஞான்றும் தத்தம் நிலையினின்றுந் தாழாமையுடி ஊழ்வினைப் பயனுல் தாழ்வு வந்தவிடத்து உயிர் வாழாமையுமே மானத்தின் இலக்கணமாம். நாணுடைமையே மாந்தர்க்குச் சிறப்பு. மானிகள் தமது மானத்தையே உலகில் உயர்வுள்ள பொருளாகக் கருதுவார்கள். அவர்கள் தம்குடிப்பிறப்புக்கெட எத்தகைய பெருஞ் சிறப்பு வருவதாயிருப்பினும் அதைத்தை பொரு பொருளாக மதியார்கள். அவர்களுடைய நோக்க மனைத்தும் மானத்தைப் புகழுடன் நிறுத்துவதிலேயே நிலைபெற்றிருக்கும். அந்த மானத்திற்குச் சிறிது இடையூறு நேரிடினும் அவர்கள் உலகில் உயிருடன் இருக்க

---

ஒட்டார்பின் — தன்னுடன் பொருந்துதலில்லாதவர் (பகைவர்) பின்னுக, சென்று—போய் (பொருளைப்பெற்று), ஒருவன் வாழ்தலின்—(அதனுல்) ஒருவன் உயிர் வாழ்தலைக் காட்டிலும்,(அதுசெய்யாமல்) அந்நிலையே— முன்னைய நிலையி லேயே (நின்று), கெட்டான்—இறந்துபட்டான், எனப்படுதல் —என்று சொல்லப்படுதல், நன்று—நல்லதாகும்.

மனஞ்சகியார்கள். இவ்வாறு அறநூற்கள் அறையாநிற்கும். மேலும் பகைவர்களிடஞ் சென்று அவர்களால் அளிக்கப் படும் உணவுகளையுண்டு உயிர்வாழ்தலினும் சாதலே நன்று. ஆகலால் நாமும் மானத்தையே மெய்புறையாகக் கொண்டு போர்மேற் சென்று பகைவனை வென்று தந்தை யாகிய வஜ்ஜிரவாகுவை விடுவித்து ஏமத்தேரினனைச் சிறைப்படுத்தவேண்டும்'' என்று கூறி, பத்திராயுவும் சுனையனும் மனோவேகத்திலும் விரைந்து செல்லக்கூடிய தங்களது இவுளிகளின்பேரிலிவர்ந்து தமது பகைவரை நோக்கிச் சென்றனர். கடல் பெருகிப் புரளுவதுபோன்ற பகைவனது பெருஞ் சேனையைக் கண்டனர். கண்டதும் பத்திராயு உலகமழிவுறுங்காலத்தே கடலைப் பிசிருக உடைக்கவரும் ஊழிக் காற்றைப்போன்று சினந்து தனது மந்திரவாளை யுருவிக்கொண்டு படைமேற் பாய்ந் தான். அவன் பாய்ந்தது மதம் பெருகும் யானையின் மூளையை வாரியுண்ணப் பாய்கின்ற இளஞ் சிங்கத்தை ஒத் திருந்தது. பாய்ந்த அவன் அநேக ஆயிரம் பகைவர்களை வெட்டி வீழ்த்தினன். கோபமோ அடங்கிற்றில்லை. ரதா ரூடனாய்த் தன் எதிரே நின்று யுத்தஞ்செய்த ஒரு பகை வன்மேற் பாய்ந்து அவனை வெட்டி வீழ்த்தி யத்தேரைத் தனக்குச் சொந்தமாக்கிக்கொண்டு அதில் அமர்ந்து மற்று முள்ள பகைவர்களை நோக்கிச் சிங்கநாதஞ் செய்தான். இவ் வோசையைக் கேட்ட மகதர்கோன் சேனைகள், கண்டீரவத்தி னது இடிமுழக்கத்தைக் கேட்டு விலங்குகள் திகைப்புண்டு வழியில்லா வழியிற் செல்வதுபோன்று சிதறுண்டு ஓடினார் கள். தனது சேனைகள் தோற்று ஓடுவதைக்கண்ட ஏமத்

தேரினன் இனி நாம் இவனை எவ்வாறு வெல்லப்போகின்ரும். இவன் நம்மை இனி விடான். உயிர் தப்பிப் போவதே நலமாகும் என்று நினைத்துத் தனது தேரை வேகமாகச் செலுத்தச்சொன்னன். இதுகண்ட பத்திராயு இவனைத்தப்பவிடக்கூடாது என்று முனிவரால் முன்னர்க் கொடுக்கப்பட்ட கோடிசூரியப் பிரகாசம் பொருந்திய வெற்றிச் சங்கத்தை முழக்கினன். பறையோசையைக் கேட்ட அசுணவிலங்கானது துடி. துடித்து மூர்ச்சையடைவது போன்று சங்கத்துவனியைக் கேட்ட எமத்தேரினன் தனது சேனையோடு கீழே விழுந்து மூர்ச்சித்தான். பத்திராயு உடனே தானிவர்ந்த தேரைவிட்டிறங்கித்தனது பிதாவிடஞ் சென்று அவர் தளையுண்டு தேர்க்காலில் கட்டுண்டு மூர்ச்சித்துக் கிடப்பதைக் கண்டான். மனஞ்சாம்பினன். தன்னை இன்னனென்று காட்டிக் கொள்ளவில்லை. வஜ்ஜிரவாகுவைத் தேர்க்காலினின்றும் அவிழ்த்து விடுத்தான். சைத்தியோபசாரஞ் செய்து அவனது மூர்ச்சையைத் தெளிவித்தான். மீண்டும் வஜ்ஜிரவாகுவைப் பத்திராயு விளித்து ஐயா ! தாங்கள் தங்களுடைய சேனையோடு தங்களது நாட்டிற்குச் செல்லுங்கள் என்ருன். இதைச் செவியுற்ருன் வஜ்ஜிரவாகு. இஃதென்ன விந்தையாக விருக்கின்றதே. நாம் பகைவனலே முறியடிக்கப்பட்டுத் தேர்க்காலில் கட்டப்பட்டோம். இனி உயிர் பெற்று வாழுவ தெங்ஙனமென்று நினைத்தோமே; யாரோ ஓர் இளந்தோன்றல் வந்து நம்மை விடுவித்தனனே. இவன் யாவன்? தேவனே அல்லது எனது மூதாதையோர் செய்த தவத்தின் பயனகவந்த அறக்கடவுளோ அறிகிலேன். எனக்கு நேரிட்ட மானக்

சேட்டிஃனயும் துயரத்திஃனயும் இவ்விஃளஞன் நீக்கி யருளினன். நான் செய்த புண்ணியமே புண்ணியம். இனி இவஃன இன்னனென்று அறியாமற்படிக்கும் வந்தஃன வழி பாடுகள் செய்யாமற்படிக்கும செல்வேனுயின் எனது ஆண் மையும் நன்றியும் என்னுகும் என்று தனக்குள்ளாகவே கூறிக்கொண்டு பத்திராயுவை நோக்கினன். "ஓ அறக்கட வுள்போன்ற ஆண்சிங்கமே உனக்கு யாது கைம்மாறு செய் யப்போகின்றேன். உனது வெற்றித்திறஃன என்னென்று கூறிப் புகழ்வது. நின்ஃனப் பெற்ருர் யாவர்? நினது பெயர் யாது? நீ ஈண்டெய்தவேண்டிய காரணமென்னே? உன் னேடு இருக்கும் இவ்விளங்குமரன் யாவனே? தயவுசெய்து கூறவேண்டும் என்றனன் வஜ்ஜிரவாகு. ஓ அரசரேறே எனது பெயர் பத்திராயு. என்னுடனிருப்போன் என்ஃன ஆதரித்துவரும் வணிகேசனது குமாரனை சுஃனயன் மற் றையவையெல்லாம் பின்னர் அறிவீர். ஏமத்தேரினஃனக் கை கால்களுக்குத் தஃளயிட்டு யாம் உத்தரவளிக்கும்வரையில் சிறைசெய்யுங்கள். இனித் தாங்கள் தங்களது நாட்டிற்குச் செல்லுங்கள். யாங்கள் விடைகொள்ளுகின்ருேம் '' என்று வணங்கினன். வஜ்ஜிரவாகு ஆனந்தக்கடலுள் மூழ்கியவ னுகித் தனது நகருக்குச் சென்று முன்போலவே அரசு செய்யாநின்ருன். பத்திராயு தனது தோழனேடு தனது இல்லத்தை அடைந்தான். தன்தாய் சுமதியைக் கண்டு வணங்கினன். அவள் அவனது போர்க் கோலத்தைக் கண்டு திடுக்கிட்டு நடந்ததை வினவினுள். அதற்குப் பத்திராயு தனது நகரமாகிய தசானனத்தை அழித்தும் படைவீரர்கஃள வெட்டி வீழ்த்தியும் ஊர்கஃளக் கொளுத்தி

நிருக்கியும் தனது தந்தையைச் சிறைசெய்துஞ் சென்ற எமந்தேரினனைத்தான் சென்று வென்று தந்தையைச் சிறைவிடுத்துத் தனது நகரத்துக் கனுப்பியதும் ஆகிய இவைகளை ஆதியோடந்தமாகக் கூறினன். இதைச் செவி யுற்ற சுமதி மனம் வருந்தித் தனது குமாரனின் வீரச் செயலை உன்னி ஒருவாறு மனந்தேறிச் சந்தோஷமுற் ருள். வணிகனும் கேள்விப்பட்டுச் சந்தோஷித்தான்.

---

## பத்தாம் அத்தியாயம்.

நானில வளங்களும் ஒருங்கே யமையப் பெற்றதான இந்நாவலந் தீவின் கண்ணே நிடதநாடு என்பது ஒன்று ண்டு என்றும், அரசன் சந்திராங்கதன் என்பான் அந்நாட் டின்அரசியலை அறநெறிவழாது செலுத்திவருகின்ருனெ ன்றும், முன் ஒரு அத்தியாயத்திற் படித்தோமல்லவா? அவ்வரசனை நாடி, பவக்கடல் கடக்கத் தவக்கலம் நடத்தும் விடபயோகி அவ்வரசனது அரண்மனையை அடைந்தார். தமது வரவினை வாயில் காப்போரால் அரசனுக்குத் தெரி வித்தார். வாயில் காப்போர்கள் அரசவையையணுகி அரசனது அடிவணங்கி அண்ணலே தேவரீரை நாடி ஒரு தபோதனர் வந்து நமது அரண்மனைவாயிலில் இருக்கின் ருர் என்றனர். அதனைச் செவி ஏற்ற மன்னன் திடுக்கிட்டு ஆசனத்தினின்றும் இழிந்து அந்தப் புரம் சென்று தனது கற்பிற் சிறந்த காதலி சீமந்தனியை யழைத்துக்கொண்டு அதிவேகமாகப் போந்தனன். அடிகளைக் கண்டு அடிப ணிந்து அழைத்துச் சென்று நல்லாசனத்திருத்தி நானு ன்கு உபசாரங்களையும் முறையே செய்தனன். பின்னர் அடிகளை வணங்கிச் சுவாமி! இந்நிலம் செய்த தவமோ

அல்லது அடியேங்களின் நலஞ் செய்ததவப்பயனே அல்லது எங்கள் குலஞ் செய்த தவமோ, தேவரீரை இங்கு எழுந்தருளப் பெற்றது. மேலும் தாங்கள் எம்முறை போந்து அடியேங்களுக்குப் புண்ணியம் மேலிடச் செய்தீர்.

* நிலஞ்செய்தவ மென்றுணரி னன்றுநெடி யோயென்
நலஞ்செய்வினை யுண்டெனினு மன்றுநகர் நீயான்
வலஞ்செய்துவ ணங்கவெளி வந்தவிது முந்தெங்
குலஞ்செய்தவ மென்றினிது கூறமுனிகூறும். (கம்பர்)

"உங்களுக்குக்கடவுளருளால் மங்கள முண்டாகுக" என்று அவர்களை வாழ்த்திய விடபயோகி அரசனை நோக்கி "அரசரேறே! நினது நற்குண நற்செயல்களைக்கேள்வியுற்று நம்மால் விரும்பியதை நும்மாட்டே முடித்துக் கொள்ளலாம் என்ற நோக்கத்துடனே யான் ஈண்டை எய்தியது" என்றனர் முனிவர். சுவாமி தபோதனராகிய தங்களுக்கும் அடியேனால் ஆகவேண்டிய காரியமுளதோ? இப்பெரியார் இரவில் பகலவனையும் பகலில் திங்களையும் காய விரும்பினும் காயுமே. அவ்வாறிருக்க இவ்வடிமையாலும் ஆகவேண்டிய காரியமிருப்பின் அதுவும் யான் செய்த தவமேயாகும் என்று தனக்குள்ளாகவே நினைத்துச் சந்தோ

---

* அடிகளே!யான் வலம் வந்து வணங்குமாறு தேவரீர் இந்த நகரத்திற்குத் தாமேயெழுந்தருளிய இக்காரியம் எனது நாட்டார் செய்த தவப்பயனுமன்று, என்னுடைய புண்ணிய பலனு மன்று ஆனல் அடியேனது முன்னோர்கள் செய்த பூஜாபலமேயாம் என்று அரசன் சொல்ல முனிவர் பதிலளிக்கலானர்.

வித்துக்கொண்டு சுவாமி நமது விருப்பத்தைத் தெரிவி யுங்கள்; அடியேங்கள் சிரமேற்கொண்டு நடக்கக் கடமைப் பட்டுள்ளோம் என்று வினவினன்.

அரசசிங்கமே! "யாம் ஈண்டுமனையினை பேசப் போந் தோம். வளம் பல பெருகும் தசானனநாட்டிற்கு அதி பன் வஜ்ஜிரவாகு வென்பார். அவரைத் தாங்களும் அறிந் திருப்பீர். அவர் புத்திரப் பேற்றை விரும்பிப் பலகன் னிகைகளைக் கடிமண முடித்தார். அதனாலும் அடையாதது கண்டு கடவுளை நோக்கித் தவங்கிடந்து அவரது மூத்த மனைவிபால் நோயோடுகூடிய ஒரு ஆண் மகவை அடைந் தார். அக்குழவியின் நோய் அதனது தாய்க்குமிருந்தது. அந்நோய் நிராததனால் அவ்விருவர்களும் அரசன் ஏவலால் காட்டில் விட்டுவிடப் பட்டனர். அப்பெண்மணியின் நல் வினைப்பயனால் ஒருவணிகன் அவளைக் குழவியுடன் அழைத்துச் சென்று ஆதரியாநின்றான். பிணியின் மேலீட்டால் அக்குழந்தை திடீரென ஒரு நாள் இறந்தது போல் மூர்ச்சையாயிற்று. அக்காலை யாம் ஆண்டுச் சென்று அம்மூர்ச்சைக் கேற்ற சிகிச்சையினைச் செய்தோம். இறை வனருளால் குழவியும் பிழைத்து வளர்ந்து, தக்க பருவ மும் வாய்ந்தான். அவன் மங்களேசுவரன் ஆவான் என் னும் பொருளை உள்ளடக்கியதான பத்திராயு என் னும் பெயரையும், போரில் ஒருவராலும் வெல்லமுடியாத ஓர் ஒள்ளியவாட் படையையும் துல்லியமான சங்கத்தை யும் அவனுக்கு அருளினம். இஃது இங்ஙனமிருக்க அவ னது தந்தையை மகதர்கோன் போர்முகத்தில் வென்று சிறைப்படுத்திக்கொண்டு செல்வதைச் சிலரால் கேள்வி

யுற்று அஞ்சாதநெஞ்சத்துடன் பகைவனை அணுகிப் போர் விளைத்து அவனது படைகளனைத்தையும் வெட்டி வீழ்த்தி எமத்தேரினனைச் சிறைப்படுத்தித் தனது தந்தை வஜ்ஜிரவாகுவைச் சிறைமீட்டுத் தனது நகருக்கனுப்பிய பெருந்தகையாளனுக்கு நினது திருமகளாகிய கீர்த்திமாலினியை மனைவினைக்கு உதவவேண்டும்'' என்றனர் முனிவர்.

கோசிகனெனத்தக்க தேசிகனே தங்கள் கருத்திற்கும் இடையூறு வருமோ? எனது அருமைப் பெண்மணிக்கேற்ற மணாளனையே குறிப்பிட்டீர்கள். அவ்வண்ணம்செய்வதற்கு யாதொரு தடையுமிலது என்று உறுதிகூறினன் அரசன் சந்திராங்கன்.

விடபயோகி தமது இருப்பிடஞ் சென்றனர். சந்திராங்கனும் தனது மந்திரத்துள்ளாரை வினவ மந்திரத் தலைவர்களும் அஃது போற்றற்பாலதே, அதை மறுப்பதிற் பயனில்லை என்று பகர்ந்தனர். சந்திராங்கன் தனது தளகர்த்தனையழைத்து ஒரு நிருபமெழுதி உறையிட்டுப் பத்திராயுவுக்கு அனுப்பினன். தளகர்த்தன் தனது நால்வகைச் சேனையும் புடைசூழச் சென்று பத்திராயுவைக் கண்டு வணங்கி நிருபத்தை நீட்டினன். நீட்டின நிருபத்தைப் பத்திராயு பெற்று உறையை நீக்கி வாசித்தான். அதில்,

நிடதநாடு.

நான்கு, ஆனித்திங்கள், அவாந்தர ஆண்டு.

சிரஞ்சீவி பத்திராயுவுக்குச் சந்திராங்கன் எழுதும் நிருபம். இறைவனருளால் அனைவரும் ஈண்டைச்சுகமே. ஆண்டை விழைவதும் அஃதேயாகும். யான் நின்னை

அறிந்திராதவனுயிருந்தும் நினது உயிர் உதவிய விடப யோகியால் இக்கடிதம் விடுக்க நேர்ந்தது. அப்பெரியார் நேற்று எம்முறைப்போந்து உபசரிக்கப்பட்டு அரியா சனத்தமர்ந்தனர். பின்னர்ப் போந்த காரணம் வினவப்பட்டது. அதற்கு அப்பெரியார் எனது அருமந்த குமாரி கீர்த்திமாலினிக்கு உனது வரலாற்றுடன் உன்னுடைய கல்விகேள்விகளையும் அறிவு ஆசாரங்களையும் வீரபராக்கிர மத்தையும்பற்றி விவரித்து, உன்னை வருகைக் குறிப்பிட்டனர். உலகத்தே பெண்களின் சுற்றத்தார் அப்பெண்ணுக்கு மணமகனுவான் நற்குலத்துதித்தவனுக வேண்டுமென்றும், தந்தையானவன் கல்வியினுல் குறையாத ஞானபலம் உள்ளவனுக வேண்டுமென்றும், தாயானவள் பாந்தபெருஞ் செல்வ முள்ள தலமுடையவனுக வேண்டுமென்றும், மணமகளானவள் யவ்வனமும் அழகுஞ்சார்ந்த நல முடையவனுக வேண்டுமென்றும் விரும்புவார்கள். இவை களனைத்து முன்னிடமிருப்பதாகத் தபோதனர் கூறிய வாற்றுல் உணர்ந்தேன். ஆகையினுல் நினக்கே எனது திருமகளைக் கன்னிகாதானஞ் செய்யவேண்டுமென்னும் விருப்பம் உண்டாயது. ஆனதால் இந்நிருபத்தை உனது அன்னைக்கும் உங்களிருவரையும் அன்போடு ஆதரித்து வரும் அறக்கடவுளன்ன வணிகனுக்கும் அறிவித்து இந் நகரம்போந்து முன்னர்ப் பெரியோரால் நிச்சயித்தவண்ணம் மணந்துகொள்ளுவாய் என்று நம்புகின்றன்.

இங்ஙனம்,

விடபயோகியின் உத்திரவின்படி

சந்திராங்கன்.

என்று எழுதியிருந்தது.

ஆகா என்செய்வான் மானுபிமானத்தை விடுத்து வலுவிலேயே தனது பெண்ணை மணந்து கொள்ளும்படி எழுதியதை உற்று நோக்குமிடத்து உலகத்தே பெண்ணைப் பெற்றவர்களெல்லாம் இவ்வாறேதான் அனுபவிக்கவேண்டும் என்பது வெளியாகின்றது.

* பண்புடையகுடிப்பிறப்பும் பழிப்பில்லாப் பேரழகும் [பரந்தகேள்வி
நுண்பொருளை நீரொழியப்பானுகருமன்னம் போனோக்கித் [திரும்
ஒண்பொருளுமிந்நான்கு முடையாரைக்கிடையாதிவ்வுலகந் [தன்னில்
பெண்பெறுகை போலிந்தப்பெரியதுயர் தானுண்டோ [பேசுங்காலே.

(ஒட்டக் கூத்தர்)

மங்களேசுவரன் பெரிய மனமகிழ்வு கொண்டான். அவனது இருதோள்களும் குன்றினும் உயர்ந்தன. உடல் பூரித்துக் கண்கள் ஆதவனைக்கண்ட அம்புஜாதங்கள்

---

* கருத்து— ஒரு கன்னிகைக்கு வாய்க்கவேண்டிய கணவன் நற்குலமும், பேரழகும், கல்வியறிவும், செல்வப்பொருளும் உடையவனாயிருத்தல் வேண்டுமென்று முறையே அவளுடைய உறவினரும், தானும், தந்தையும், தாயும் விரும்புவார்கள்—ஆனால் இந்நான்கும் ஒருங்கே ஒரு புருஷனிடம் பொருந்தி யிருப்பது அருமை—ஆதலால் பெண்மகவைப்பெறுவதால் உண்டாகும் துன்பம் போன்ற பெருந்துன்பம் வேறில்லை—என்பது.

போன்றன. கடிதத்தைப் படிப்பான், மீண்டும் பிரிப்பான். ஒன்றும் தோன்றவில்லை. இக்கடிதத்தை அன்னைக்கும் பநுமாரகனுக்கும் காட்டும்படி எழுதியிருக்கிறதே? என் செய்வது? நானாகவே இந்தலிகிதத்தைக் காட்டா விடினும் பயனில்லை. காட்டித்தான் ஆகவேண்டும். மேலும் இக் காரியம் அனைவருக்கும் உரிமை யானது தானே. நம்மை அவர்கள் யாது சொல்லக்கூடும் என்று பத்திராயு தனக்குள் ளாகவே ஒருவாறு தீர்மானித்துக்கொண்டு, அன்னை சுமதி யை நோக்கிச் செல்வான் மீண்டும் வருவான். இவ்வண்ணம் கொஞ்சதூரம் போவதும் மீண்டும் மீளுவது மாயிருக் கையில் தனது நண்பனை சுனயன் ஆண்டு அடைந்தான். நண்பனைக் கண்டதும் மங்களேசுரனுக்கு ஒன்றும் தோன்ற வில்லை. வாய்திறந்துபேசவுமில்லை. கடிதத்தைமறைக்க ஆர ம்பித்தான். இதைக்கண்ட சுனயன் இது என்ன வியப்பாக விருக்கின்றதே. மங்களேசுரன் இதுவரையிலும் இல்லாத இவ்வித நிலைமையிலிருப்பதற்குக் காரணமென்னோ? நாம் வருமுன்னரேயே எதிர்கொண்டு ஓடிவந்து கட்டித்தழுவி அளவளாவுவனே. நான் ஏதாகிலும் என்னை அறியாமலும் தீங்கிழைத் திருக்கின்றேனோ? அவ்விதமியற்றியதாக வும் ஒன்றும் ஞாபகத்துக்கு வரவில்லையே என்று ஐயுற்று மங்களேசுரனருகிற் சென்றான். அவன் மறைக்கும் கடிதத்தையுங் கண்டான். என்ன மங்களேசுவரா என் னிடம் ஏதாகிலும் வருத்தமுண்டோ? என்னிடம் உரையாடாததற்குக் காரணமென்னோ? நீ மறைக்கும் கடிதம் ஏதோ? என்று வினவிக் கொண்டே கடிதத்தைப் பிடுங்கிக் கொண்டான். பத்திராயு அக் கடிதத்தை

மீட்க முயன்றானாயினும் அது பயன் பெற்றிலது. சுனேய னும் அதைப் படித்துப் பார்க்க வேறோரிடஞ் சென்றனன். நிருபத்தைப் பிரித்துப்பார்த்தான் சுனேயன். அதனிடம் அடங்கியிருக்கும் மணவினைச் செய்தியை முற்று முணர்ந் தான். மனங்களித்து முகமலர்ந்து ஒளிர்ந்து நண்பனிடம் ஓடினான். மங்களேசுவரனை மார்பிடைத் தழுவினான். "இக்கடிதத்தை ஒளிப்பானேன்? அதனோடு மனதையும் ஒளித்தனை. இத்தகைய மங்கலமான விஷயத்தைக் கேட்க நான் பாத்திரனல்லனோ? கடிதத்தில் கண்டவண்ணம் உனது அன்னையினிடம் காண்பிக்க வெட்க முறினும் என்னிடம் விஷயத்தையாகிலும் சொல்லலாமே? உலகத்தே நண்பர்களிடத்து எதையும் கூறலாம் என்ற வதந்தி யிருக்கின்றதே. அஃது யான் செய்த தவத்தின் பயனே யாகும்" என்று பலவாறு நிந்தனையாகக் கூறினான். எனது நண்பா! நாணங் கொள்ளுதல் பிராணிகளுக்கு இயற்கைதானே. அவ்வாறு இருக்க நீ என்னை நிந்தனை கூறுவதாற் பயனுளதோ? பல பல சொல்லுவதால் இனிப் பயனில்லை. அந்நிருபத்தைக் கொண்டு என்ன செய்யவேண் டுமோ அதனைச் செய்யலாம் என்றனன் பத்திராயுவென் னும் மங்களேசுவரன். இதைக் கேட்ட சுனேயன் அந் நிருபத்துடன் புன்சிரிப்போடுகூடின முக மலர்ச்சியோடு சுமதியை அடைந்தான். அடிபணிந்து வணங்கினான். வணங்கிய சுனேயனை வாழ்த்தியெடுத்து "அப்ப ஏதாகிலும் விசேஷ முண்டோ? என்றுமில்லா மனமகிழ்ச்சியோடே ஈண்டை எய்தியதன் காரணமுமுளதோ"? என்று வேடிக் கையாகவினவினாள். அம்மா! உண்மையே தாங்கள் கூறு

வது. என்று மில்லாச் சந்தோஷந்தான் என்னைச் சிறைப் படுத்தியது. அதனாலன்றோ யான் மெய்மறந்து தங்களோடு இவ்வளவு வேடிக்கையாகப் பேசுவது என்றனன் சுனையன். "அஃதென்ன அத்தகைய வதிசயம். அவ்வதிசயத்தை நானும் அறியலாமோ"? என்றனள் சுமதி. அதற்குச் சுனையன், அம்மா தாங்கள் அறியாமலும் அது நடை பெறுமோ? என்றனன்.

இது என்ன வேடிக்கையாகவே மேலும் மேலும் விஷயத்தைக் கூறாமல் வீணாகப் பேசுகின்றனையே சீக்கிரம் சமாசாரத்தைக் கூறுவாயாக? என்று வினவினள் சுமதி. அதற்கு அம்மா! எனது நண்பனான நினது குமாரனுக்கு மணவினை நடைபெறும்போல் காண்கின்றதே என்றனன் சுனையன். ஆமாம் அது இயற்கைதானே மக்களாகத் தோன் றியவர் அனைவருக்கு மணவினை என்றைக்காகிலும் ஒரு தினம் நடைபெறத் தான் வேண்டும்; அதைப்பற்றி இப் போதே பிரஸ்தாபிப்பானேன் என்றனள் சுமதி. அம்மா! அவ்வாறன்று கூடியசீக்கிரத்தில் நமது மங்களேசுவரனுக்கு மணம் நடைபெறப் போகின்றது. அதற்குச் சாக்ஷியம் வேறு வேண்டுவதில்லை இந்திருபமே சாலும்; என்றனன் சுனையன். அஃதென்ன நிருபம்? அஃது யாண்டையது? நீ கூறும் அனைத்தும் வியப்பாக இருக்கின்றனவே என்று சுமதி வினவச் சுனையன் கூறுவான். "நிடதநாட்டுக்கிறை வன் சந்திராங்கன், நமது குலகுருவாய் விளங்கும் விடப யோகியினது ஏவலால் நினது குமாரன் மங்களேசுவரனுக் குத் தனது அருமைத் திருக்குமாரியை பாணிக்கிரஹணம் செய்துகொடுப்பதாகவும், அம்மணவினையின்பொருட்டு நம்

மனைவரோடும் எனது நண்பனை ஆண்டைக் கெய்தும்படியும் இந்நிருபம் வரைந்துள்ளான்;'' என்றனன் சுனையன். இச்செய்தியைச் செவியேற்ற சுமதி ஆநந்த பாவசளாய் நற்செய்தி கொண்டுவந்த சுனையனை ஆசீர்வதித்தனள். பின்னர்த் தனது குமாரனை விளிக்க அவன் நாணத்தினல் தலை குனிந்தபடியே தாயை அணுகி வணங்கினன். வணங்கிய தனது செல்வனை மார்போடணைத்து உச்சிமோந்து உனக்கு இறைவனருளால் மங்களமுண்டாகப் போகின்றது; என்று ஆசிகூறினள். உடனே அச்செய்தியைத் தனது சகோதரன் போன்றவணிகன் பதுமராகனுக்குத் தெரிவித்தாள். அவ் விஷயத்தைச் செவியுற்ற வணிகனும் பெரு மகிழ்ச்சி கொண்டு ஓடிவந்து அவர்களுடன் கலந்து நிடதநாட்டிற்குப் புறப்படவேண்டியவைகளை ஆயத்தம் செய்தனன். சுமதி, பதுமராகன், மங்களேசுவரன், சுனையன் ஆகிய நால்வரும் தங்களுக்கு வேண்டியவைகளை யெடுத்துக்கொண்டு சந்திராங்கனல் அனுப்பப்பட்டிருந்த இரதங்களில் இவர்ந்து அவ்வரசனது சேனதிபதியுடன் வந்திருந்த சதுரங்க சேனைகளும் புடைசூழச் சென்று நிடத நாட்டை அணுகினர்கள். இதை அறிந்த சந்திராங்கன் அவர்களை எதிர் கொண்டு அழைத்துச் சென்று அவர்களுக்கு விடப்பட்டிருந்த இல்லத்தே இருக்கச் செய்தனன். பின்னர் அரசன் சந்திராங்கன் பல பெரியார்களோடும், சுமதி, பதுமராகன் முதலானவர்களோடும் கலந்து முகூர்த்த நிச்சயம் செய்து கொண்டான். பிறகு சோதிடன் அழைக்கப்பட்டான். முகூர்த்தத்துக்கான நன்னளும் கணிக்கப்பெற்றது. கீர்த்திமாலினியின் மணவோலையை எல்லா அரசர்களுக்கும் விடுத்

தனன். தனது நகரத்தேயும் பறை சாற்றுவித்தான். பின்னர், மங்களேசுவரன் முதலானவர்கள் போஜனகாரியங்களை முடித்துக் கொண்டு அமர்ந்தனர். வையம் பகலை இழக்கவும், பொய்கைகளும், தடாகங்களும் புட்களை இழக்கவும், கதிரவன் மெல்லச் சென்று குடகடலில் ஆழ்ந்தனன்.

---

## பதினோராம் அத்தியாயம்.

தோரண நடுவார்கள் தூணுறை பொதிவார்கள்
பூரண குடமெங்கும் புனைதுகில் புனைவார்கள்
காரணி நெடுமாடம் கதிர்மணி யணிவார்கள்
ஆரண மறைவாணர்க்கு அமுதினி தடுவார்கள்.

(கம்பர்.)

அரசன் சந்திராங்கனின் கட்டளையின்படி அவனது அரண்மனை செவ்வனே சிங்காரிக்கப்பட்டது. மங்களேசுவரனது மணவினைக்கு வேண்டிய அனந்த வற்பாடுகளும் விமரிசையாக நடந்தேறின. மணமுரசத்தைச் செவியேற்று மகிழ்ந்த முதியவர்கள் இளையவர்களை வவல் கொண்டு தங்களது அரசகுமாரியின் மணவினைக்காக நகரினை அலங்கரிக்க ஒன்றுசேர்ந்தனர். இதற்குள் மங்களேசுவரனும், கீர்த்திமாலினியும் நாளை மணம்புணர்வார்களென்ற சொற்கேட்டுத் தன் செஞ்சுடரால் இருளைக்கீறி ஆதித்தன் தனது தேரிலிவர்ந்து அவ்விழாவினைக் காண்பான் வேண்டிப் புறப்பட்டு வந்தவன்போன்று கீழ்க்கடலிடத்தே உதயகிரியி லுதயமாயினன்.

இவ்வாறு தோன்றவே குழுமியிருந்தோரிற் சிலர் கூட

கோபுரங்களோடு கூடிய மாடமாளிகைகளின் மசு துடைத்தனர். சிலர் சுண்ணங்களையும் சித்திரங்களையும் சிறக்கத் தீட்டினர். சிலர் தோரணம் நாட்டித் தூண்களின் உறையக் கிழித்து மணிகளின் மாசு துடைத்தனர். சிலர் பூரண கலசங்களுக்கு ஆடையைப்புனைவார். சிலர் மேகம் தவழும் நெடியமாளிகையில் கதிர்மணிமாலைகளை யணிவார். சிலர் வேதபாராயணம்செய்வர். சிலர் இனியவுணவுகளை யமைப்பார். அன்மென்னடையாரும் மழவிடைபோல்வாரும் அழிவில்லாத நகரத்தில் வாழையுங் கமுகு நடுவார். முத்தமாலையையாராய்ந்து எடுப்பார். பொன் அணிகளைப்புனைவார். மணியணிகளை அணிவார். சந்தனத்தினால் வீடுகளை மெழுகுவார். ஓரம் பொன்னாற்செய்யப்பட்டு உயர்ந்த பளிங்குத் திண்ணைகளில் தீபக்குடம்வைப்பார். இளமுளைகளாகிய பாலிகைகளை அத்திண்ணைகளில் வரிசையாக வைப்பார். மந்தரமலைபோன்ற மாடாங்களின் முற்றத்திலெங்கும், இந்திரன் ஆளுகையில் அமைந்த அகல்வானம் நாண்மீனம் பூத்தாற்போல முடிவில்லாமல் பிரகாசிக்கின்ற முத்துவடங்கள் ஒளிவீசவும், பச்சைப்பந்தர் நிழலைத் தரவும், படர்ந்த வெயிலைக்கடிந்து நீக்குவார். வரம்பில் வயிரமணிபதித்து மரகதத்தாலமைத்த ஓமகுண்டத்தின் பக்கத்தில், தீபக்குடங்களை சில தாதியர் கொணர்ந்து வைப்பார். ஆடவர்களோ ! கொடிகளைச் சந்திரன் தவழ்கின்ற மதிண்மேல் நடுவார்கள். மணமுள்ள மலர்மாலைகளை வண்டிகளில் நிறைத்து ஓட்டி வருவார்கள். சோலைகளிலுள்ள வாழைமரங்களின் இலையோடு கனி பலவற்றையுங் கொண்டுவருவார்கள். தெருக்கள்தோறும் சந்திகள்தோறும் வாத்திய ஒலிகளை

எழுப்பினர். இங்ஙனம் பலவகையாலும் அங்நகரத்தை அமராபதி என்னலாம்படி யலங்கரித்தார்கள்.

குறித்த காலத்தில் பல விடங்களினின்றும் பல மன்னர்கள் வந்து சோலைகளினுள்ளும் தடாகங்களின் கரையிலும் உறைந்தார்கள். அந்நகர மாதர்கள், பொன்னுடையுடுத்துக் காரெனக்கருத்து நீண்ட கூந்தலில் கோதை புனைத்து, செவ்வரிபடர்ந்து நீண்ட தமது கண்களில் மையினைத்தீட்டி, முத்துமாலைகளைக் கழுத்திலிட்டு, மார்பில் பிறைவடமணிந்து, நுண்ணிய இடையில் மணிகளிழைத்த மேகலையணிந்து, கைகளில் பொன்வளைபூண்டு, சில்லரிச் சிலம்புகளைக்காலிலிட்டு, தோள்களில் சந்தனக்கோலம் எழுதித் தாமரைமலர்போன்ற மெல்லடிகளில் செம்பஞ்சுக் குழம்பு பூசி, திருநுதலில் திலகமிட்டுத் தேவமாதர்களும் அழகில் தோற்கும்படி விளங்கினர். பாத்தையர்பலரும் தமது பக்கவாத்தியங்கள் ஒலிக்கப் பலவிடங்களிலும் நாட்டிய மாடினார்கள். சிலவிடங்களில் குரவைப்பாட்டும் குரவைக்கூத்து முறையே பாடவும் ஆடவும் பெற்றன. கீர்த்திமாலினியின் மணவினையைக் காணும்பொருட்டு அந்நகர மாந்தர்களிற் சிலர் பாலசூரியனைப்போல் ஒளிபரப்பும் மணிகளிழைத்த சிவிகையூர்ந்து வந்தனர். சிலர் மதஜலம்பெருகும் மழகளிற்றிலிவர்ந்து வந்தனர். சிலர் பஞ்சகல்யாணிக் குதிரைகளில் ஏறிவந்தனர். அவ்வண்ணமாக அன்றைப் பொழுதும் கழிந்தது. இதற்குள் மணவிழாவினுக்காகக் குறித்தநாழிகையும் நெருங்கியது. பொழுதும் விடிந்தது.

---

## பன்னிரண்டாம் அத்தியாயம்.

சங்கினம் தவழ்கடல் எழில்தந்தன
சிங்கலில் அருமறை தெரிந்ததீர்த்தங்கள்
கங்கையே முதலிய கலந்தநீரினால்
மங்கல மஞ்சனம் மரபின் ஆடினான். (கம்பர்)

திருமண தினத்தின் அதிகாலையில் மங்களேசுவரனும் அந்தணர்கொணர்ந்த நதிப்புனல்களில் நீராடிநித்தியகருமங் களைமுடித்துக்கொண்டான். இரவலர் பலருக்கும்பொற்காசு களைத்தானமாக வழங்கிப் பரிஜனங்களோடு அலங்கார அறையை அடைந்தான். ஒப்பனை செய்வதில் ஒப்புயர்வற்ற சிலர் குன்றுகளின்மீது கதிரவனுடைய கதிர்கள் தவழ்வது போல மங்களேசுவரனுடைய தோள்களின்மீது கதிர்கள் தவழும்படி அவனுடைய காதுகளில் மணிக்குழைகளை யணிந்தார்கள். அகன்று உறம்பெற்று விளங்கும் அவனு டைய மார்பிடை முத்து வடத்தினை இட்டார்கள். அது மலை யிடைத் தாழ்ந்தொழுகும் அருவியைப்போன்று விளங்கி யது. அவனுடைய திண்ணியதோள்களில், கற்பகத் தரு வைத் தழுவிய காமர் வல்லிக்கொடிகள் போன்ற இரண்டு தொடிகளை யணிந்தார்கள்.

அவனுடைய மருங்கில் சேர்த்த வெண்பட்டாடை யானது பொன் மலையில் வெண்முகில் தவழ்வதுபோல் விளங்கியது. அவனுடைய இருகால்களிலும் அணிந்த பொற்கழல்களானது, இம்மங்களேசுவரனை யொப்ப அழகு

---

சிங்கல் இல்=கெடுதல் இல்லாத, அருமறை தெரிந்த= அரிய வேதங்கள் தெரிந்து கூறிய, மஞ்சனம்=முழுகுதல்.

ஆண்மை, வண்மை முதலிய குணங்கள் யாவும் ஒருங்க மைந்தார் இவ்வுலகில் ஒருவரும் இல்லை இல்லை என்றுரைப் பனபோன்று ஒலியானின்றன. கோடி சூரியப் பிரகாசமான ஒரு முடியை அவனது சிரத்திற் சூடினார்கள். இங்ஙனம் மங்கலேசுவரன் இத்தகைய சிறந்த அணிகள் பல அணிந்து, பொன்னுடை யணிந்து முகபடாத்தினைப் பூண்டயானையின்மே லிவர்ந்து மணவறைமண்டபத்துக்குச் செல்லப்புறப்பட்டான்.

இஃது இவ்வண்ணமாக, மணவினைக்குரிய காலம் அணுகிற்று; என்றதைக் கேட்ட சிலதியர் சிலர் அந்தப் புரத்திற் கோடி அச்செய்தியை ஆங்குள்ள தோழியர்க்கு அறிவித்தார்கள். உடனே தோழியர் அனைவரும் கீர்த்தி மாலினியை வாசநீராட்டினார்கள். நீரினால் நனைந்த புரி குழல் உலரும்படி அதற்கு வாசப்புகை யூட்டினார்கள். பொதிய மலையினின்றும் கொண்டுபோந்த சந்தனத் தேய்வையை உடலிற் பூசிப்பொன்னுடை உடுத்தினார்கள். சூலுற்ற கரிய மேகமானது மெல்லிய கொடிகளின் வடிவ முற்றுக் கிடந்தாற் போன்ற குழல்வட்டத்தில், முகிலினிடையில் மதிதோன்றினாற்போலச் சிகழிகை என்னும் மாலையைப் புனைந்தார்கள். ஒளி மிகுந்த உடுக்குலங்கள் வந்து உவாமதியைச் சேர்ந்தனபோலச் சுட்டி என்னும் அணியை ஒளி மிகும்படி தொங்கக் கட்டினார்கள். கருத்துச் சைவலம்போன்ற கூந்தலில் பூட்டு என்னும் அணியினை அணிந்தார்கள். அது முகிலால் சூழப்பெற்ற மதியினைப் போன்று விளங்கியது. கல்களாகிய பகழிகளால் காதுகள் தாக்குறாதபடி அமைத்த காவல் என்னலாம்படி காதுகளில் ஒளி

மிருந்த மணிகளிழைத்த குழையை இட்டார்கள். திரு மாலின் பஞ்சசான்யத்தினுக்கு அணிகளை அணிவாரைப் போல் அவளது கழுத்தில் உயர்ந்த அணிகளை யணிந்தார்கள். வானகத்தே விளங்கும் வான்மீன்களில் ஒளி மிக்கனவற்றைக் கோத்துவைத்தாற் போன்ற முத்துமாலைகளை உந்தியளவும் தொங்கும்படி கழுத்திலிட்டார்கள். பகலவனொளியையும் மழுங்கச் செய்யும் பதுமராகமணிகளாலும் முத்துகளாலும் ஆன அணிகளை, உவமை கூறுதற்கரிய அவளது தோள்களி லணிந்தார்கள். நவரத்தினங்களாலிழைத்த பொற்கடகங்களை அவள் கைகளிலிட்டார்கள். மான்மாதங் கலந்த சந்தனச்சாந்தினால் அவளுடையதோள்களில் பூங்கொடியையும், அநங்கன் வில்லையும் தீட்டினார்கள். எல்லாம் வல்ல இறைவனைப்போல் இல்லை உண்டென்ன நிற்கும் இடையில் மேகலையைஅணிந்தார்கள். அனிச்சமென் மலரினும் மென்மைத்தாகிய அவளது உபய பாதங்களிலும் சிலம்புகளையிட்டார்கள்.

இங்ஙனம் தோழியர்கள் கீர்த்திமாலினிக்குப் பல அணிகளையும் அணிந்து அழைத்துக்கொண்டு தேவயானையைச் சூழ்ந்து சென்ற தேவமாதர்களைப் போல அவளைச் சூழ்ந்து திருமண மண்டபத்திற்குச் சென்றார்கள். மழகளிறூர்ந்து மணவறைக்குச் செல்வான்போந்த மங்களேசுவரன் அரச வீதியைப் பவனிவரத் தொடங்கினன்.

அந்நகரத்திலிருந்த பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்ற ஒவ்வொரு பகுப்பினரும் மாடங்களிலும், மேடைகளிலும், வாயில்களிலும், தெருக்களிலும் வந்து நெருங்கி நின்று,

தங்கள் தங்களது பருவத்துக்குத் தக்கபடி மணமகனாகிய மங்களேசுவரனது பேரழகினைப் பருகிவிடுபவர் போலப் பார்த்தும், அவனது வீரச் செயலினை வியந்தும், முடிவாக இம்மணமகனது வடிவழகைக் கண்ணாராக் கண்டுகளிக்க இமையாநாட்டம் பெற்றிலம் என்றும், பலவாறு புகழ்ந்து பேசிப் பொருளையும் பொன்னையும் வீசியும், மலரையும் சுண்ணத்தையும் இறைத்தும் தங்கள் தங்களது சந்தோஷத்தைத் தெரியப்படுத்தினார்கள். இங்ஙனம் அரசவீதி நான்கினும் பவனிவந்து மழகளிற்றினின்றும் இறங்கிய மங்களேசுவரனுக்கு ஒழுக்கமும் வயதும் ஒருங்கே நிரம்பப் பெற்ற பெருமுது பெண்டிர்கள் ஆலம் சுழற்றிக் கண்ணேச்சிலேக் கழித்தார்கள்.

பின்னர் மணமகன் வேதவொலி, வாழ்த்தொலி, வாத்தியவொலி முழங்க மணவறையை அடைந்தான். அக்காலே விடபயோகியைத் தலைவராகக் கொண்ட அந்தணர்கள் அருமறை விதிப்படி அக்கினியை வளர்த்தி மணச்சடங்குகளை மாகூழியுடன் நிறைவேற்ற, பண்டுத் தேவசேனையைத் தேவசேனாதிபதியாகிய முருகவேள் மணந்தாலொப்ப மங்களேசுவரன் கீர்த்திமாலினியைப் பாணிக்கிரகணம்செய்து மணமாலை சூட்டி மாங்கலியம் தரித்தான். அந்தணர்கள் ஆசி கூறினார்கள். இவ்வண்ணம் மணவினை செவ்வனே நடந்தேறியது. மன்னவரிற் பலர் மணமகனுக்கும் மணமகளுக்கும் பலவேறு வெகுமதிகள் புரிந்தனர். அரசன் சந்திராங்கனும் மருமகனுக்கு யானை குதிரை முதலானபல வரிசைகளையும் மகிழ்ச்சியோடு தந்தனன். பின்னர்த் தம்பதிகளிருவரும் பெரியாராகிய விடபயோகியாரது ஆசீர்வாதம் பெறு

வதற்கு அவரது உபயபாதங்களிலும் வீழ்ந்து சேவித்தனர். வீழ்ந்த தம்பதிகளை வாரியெடுத்து முனிவர் ஆசீர்வதித்தார். அவ்வமயம் அருகிருந்த சுமதி அந்தண சிரேட்டராகிய முனிவரரை வணங்கி, "சுவாமி அடியேங்கள் அடைந்த இப்பேறு தாங்களாலன்றோ? தாங்களே உமது மாணவனுக்கு இல்லறதருமத்தைக் கூறிச் செவ்வனே இல்வாழ்க்கையை நடத்துமாறு அநுக்கிரகஞ் செய்யவேண்டும் என்று விண்ணப்பித்தாள். அவ்வாறே ஆகட்டும் என்று சுமதிக்கு உபசாரமொழி கூறி, தனது மாணவனுக்கு இல்லறத்தின் அருமை பெருமையினையெடுத்துக்கூறப் பத்திராயுவினை நோக்கி "மங்களேசுவரா! யான் கூறுமவற்றைச் செவியேற்றுச் செவ்வனே யவ்வழி ஒழுகுவாயாக! என்று கூறிப் பின் வருவனவற்றைக் கூறத் தொடங்கினர்.

---

## பதின்மூன்றும் அத்தியாயம்.

இயல்பினா னில்வாழ்க்கை வாழ்பவ னென்பான்
முயல்வாரு ளெல்லாந் தலை. (குறள்)

"உலகத்தே மனிதர்களாகப் பிறந்தார் அடையவேண்டிய பேறுகள் நான்கு. அவை தருமார்த்த காம மோக்ஷங்களாகும். இவைகளுக்குத் திருவர்க்கம் அபவர்க்கம் என்ற வேறு பெயர்களுமுண்டு. திருவர்க்கம் தருமம், அர்த்தம்,

---

இல் வாழ்க்கை = இல் வாழ்க்கையில் நின்று, இயல்பினான் = (அவ்வில் வாழ்க்கைக்குரிய) இயல்போடு கூடி, வாழ்பவனென்பான் = வாழுகின்றவனென்று சொல்லப்படுவோன், முயல்வாருளெல்லாம் = (புலன்களைவிட) முயற்சி செய்கின்றவர்களுள்ளும், தலை = முதன்மையாவான்.

காமம் என்பன, அபவர்க்கம் மோக்ஷம் ஒன்றேயாகும். இவை இரண்டனுள்ளும் திருவர்க்கம் தலை சிறந்தது. என்னேவெனில் திருவர்க்கங்களாகிய மேற்கூறிய மூன்றுமின்றி அபவர்க்கமாகிய வீடுபேற்றினை யடையமுடியாது.

அவ்வாறு கூறும் திருவர்க்கமாகிய மூன்றனுள்ளும் தருமம் அதாவது அறமே தலைசிறந்தது. அறமில்லாமற்படி பொருளையும் இன்பத்தையும் பெறமுடியாது. இக்கூறிய அறந்தானும் இருவகைத்து. அஃது இல்லறம், துறவறம் என்பன. இவ்விரண்டனுள்ளும், இல்லறமே தலைநின்றது. இல்வாழ்வனே மற்று ஏனையவர்கள் செல்லும் நல்லொழுக்க வழிகளில் நிலைபெற்ற துணையாவான். பிரமசாரி, வானப்பிரஸ்தன், சன்னியாசி, துறந்தார், தரித்திரர், இறந்தார், பிதிரர், தெய்வம், விருந்தினர், சுற்றத்தார் என்னும் பதின்மரே மற்று ஏனையவர்களாவார்கள். ஒருவன், துறவறத்திற்குப்போய் அடையும் பயனை இல்லறத்திலிருந்தே அதனைத் தருமவழியாக நடத்தி அடையலாம். மேலும் நீ இல்லறத்திற்குத் தக்க நற்குண நற்செய்கைகளை யுடைய மனைவியையும் அடையப் பெற்றனை. ஆதலால் மேற்கூறிய வழிகளில் நின்று இல்லறத்தினை நடத்துவாயாக. அப்படி நடத்தினையல்லாது யான் முன்னற்கூறிய அரசியலைச் செவ்வனே பிறன் பழிப்பில்லாது நடத்த வியலாது;" என்று கூறி முடித்தார். அன்றுமுதல் மங்களேசுவரனும் அவனது மனைவி கீர்த்திமாலினியும் உடலும் உயிரும் போலவும் மலரும் மணமும் போலவும் நகமும் சதையும் போலவுமிருந்து, இல்லறத்தினை வழுவாது நடத்தி வருவாராயினர். அரசன் சந்திராங்கனும் அவனது கற்பிற் சிறந்த காதலி

யாகிய சீமந்தனியும் தமது மருகனும்மகளும் நடத்திவரும் இல்வாழ்க்கையினைக் கண்டு மகிழ்வாராயினர்.

---

## பதினான்காம் அத்தியாயம்.

"அறவோர்க்களித்தலு மந்தணரோம்பலும்
துறவோர்க்கெதிர்தலுந் தொல்லோர்சிறப்பின்
விருந்தெதிர் கோடலும்." (அடியார்க்குநல்லார்.)

ஆகிய இல்லறவொழுக்கங்களைத் தம்பதிக ளிருவரும் வழுவாது நடத்திவருங்காலை அரசன் சந்திராங்கன் தன் மனைவி சீமந்தனியோடு பின் வருமாறு ஆலோசிக்கலாயி னான். "காதலி சீமந்தனி ! மருகனும் மகளும் நடத்தி வரு கின்ற இல்லறத்தினைக் கண்டு நாமேமகிழ்வதாற் பயனில்லை மருகன் மங்களேசுவரனது தந்தை தாயாரும் கண்டுகளிக்க வேண்டுமன்றோ ! தாயாரோ உடனிருக்கின்றார்கள். ஆகை யினால் அவனது தந்தையாகிய வஜ்ஜிரவாகுவை வரவழை த்து அவரது மனைவியையும், மகனையும், மருமகளையும் அவருடன் கூட்டி யனுப்புவோமாகில், அவரும் கண்டுமகிழ் வாரன்றோ ? என்று கூறினான். சீமந்தனியும் மகிழ்வெய்தி இனிஇதுவே செய்யத் தகுந்தகாரியம். அக்காரியத்தால் இரு வித பயனும் உண்டு. ஒன்று தாம் விட்டுவிட்ட மனைவியை அடையப் பெற்றதாகும். மற்றொன்று மகனை மருமகளோடு கண்டுகளிப்பதாகும் என்று நவின்றாள்.

"உடனே அரசன்மந்திரியை அழைத்துத் தசானன நக ரத்துஅரசன் வஜ்ஜிரவாகுவை ஒரு நிருபம் எழுதி வரவ ழைக்க வேண்டுமென்று கட்டளையிட்டான். கட்டளையைச்

சிரமேற்கொண்ட அமைச்சனும் ஒருதிருபம் வரைந்து அரச னது கையொப்பம் பெற்றுத் தூதர்பால் கொடுத்து அனுப் பினன். தூதர்களும் பலமலைகளையும் காடுகளையும், வயல் களையும் கடந்து தசானன நகரத்தை அடைந்து அரசனது அரண்மனை வாயிலைக் குறுகித் தங்களது வரவினை அரச னுக்கு உணர்த்துமாறுவேண்டினர்கள். வாயில்காப்போரும் சென்று தூதர்கள் வந்திருக்கும் செய்தியை அரசனுக்கு உணர்த்தினர்கள். அரசன் தூதர்களை உள்ளே வரும்படி கட்டளையிட்டான். தூதர்கள் உள்ளே சென்று அரசனது அடிபணிந்து திருமுகத்தை நீட்டி "அரசே யாங்கள் நிடத நாட்டரசன் சந்திராங்கனால் அனுப்பப்பட்ட தூதர்கள்" என்றனர். அரசவையிருந்த அமைச்சனும் அத்திரு முகத்தைப் பெற்று அரசனிடம் காட்டினன். அரசன் அத் திருமுகத்தை வாசிக்கக் கட்டளையிட்டான். அவைக்களத் திருந்த கருணீகன் அதைப்பெற்று வாசிக்கலாயினன்.

நிடதநாடு.

ஐந்து ஆவணித்திங்கள் அவாந்தர ஆண்டு

காமர்மிகுந்த கயங்கள் தோறும்
தாமரை பொலிந்த தசானனத்தோய் !
யாமுனைக் காண்பானீண்டு விரும்பினம்
ஆதலால் உம்மை யன்புடன்வேண்டியே
காதலால் விடுத்தனன் கனைகழல்வேலோய்
முறைமையாலிந்த முடங்கலை யானுமே.

இங்ஙனம்.

சந்திராங்கன்.

இவ்வண்ணம் நிடதர்கோன் எழுதிய முடங்கலிலிருந்த செய்தியைச் செவியேற்ற வஜ்ஜிரவாகு, உவகை மேலீட்டால் அடங்காப் பெருமகிழ்வெய்தி, தனது புறப்பாட்டிற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யுமாறு அமைச்சனுக்குக் கட்டளையிட்டான். அவ்வண்ணமே, அமைச்சனால் ஏவப்பெற்ற ஏவலாளர்கள் காற்றினும் கடிகிச் சொல்லக்கூடிய நான்கு பரிமாக்களை அலங்கரிக்கப்பெற்ற இரதத்திற்பூட்டிக் கொணர்ந்து அரசனது கோயில்வாயிற்படியில் நிறுத்தினர்கள். வஜ்ஜிரவாகுவும் நல்லோரையிலே இரதமேறி யமர்ந்தான். நால்வகைப்படைகளும் புடைச்சூழ இரதம் செலுத்தப்பெற்றது. பல மலைகளும் காடுகளும் கடக்கப்பட்டது. நிடதநாடும் கிட்டியது. வஜ்ஜிரவாகுவினது வரவை ஒற்றரால் கேள்வியுற்ற அரசன் சந்திராங்கன் தனது அமைச்சர் புரோகிதர் முதலியோர் புடைச்சூழப் புறம்போந்து வஜ்ஜிரவாகுவை எதிர்கொண்டான். வஜ்ஜிரவாகு நிடதர்கோனினது எதிர்கோடலைக்கண்டு உடனே இரதத்தை விட்டு இறங்கினன். இருவரும் ஒருவரை யொருவர் தழுவிக் கொண்டு உபசார மொழிகள் பல கூறிக் கொண்டார்கள். பின்னர்ச் சந்திராங்கன் வஜ்ஜிரவாகுவை யழைத்துக் கொண்டு தனதரண்மனைக்குச் சென்று வேண்டியவாறு உபசரித்து ஆசனத்திலிருக்கச் செய்தான். இவ்வுபசாரங்களை யேற்ற வஜ்ஜிரவாகு, "இந்நிடதாதிபனைப்போல் இவ்வுலகத்தில் நட்புக்கொள்ளப் போகின்றவர்கள் யாவர் தானிருக்கின்றார். என்று பலவாறு சந்திராங்கனைப் புகழ்ந்து நிற்கையில், பரந்தவிழியினன், அகன்றமார்பினன், பருத்த தோளினன், நீண்ட கையினன், வீரக்கழலினன் ஓரிளங்

தோன்றல் புரவிமீதேறிக் காற்றினுங் கடிகி அரண்மனை நோக்கிவந்தான். அரண்மனை வாயிலில் வாம்புரவியை நிறுத்திக் கீழே இறங்கி உட்சென்று வஜ்ஜிரவாகுவின் அடிபணிந்து கைகட்டி அயல்நின்ருன். அவ்வண்ணம் அடிபணிந்து அயல்நின்ற அரசிளஞ் சிங்கத்தை ஆசீர்வதித்து உற்று நோக்கினன். "அரச கேசரியாகிய இவ்விளந்தோன்றலை நோக்கின், அன்று எனக்கு உயிர் பிச்சைகொடுத்த உத்தம வள்ளலாகக் காணப்படுகின்ருன்." என்று தனக்குள்ளாகவேசிந்தித்து மங்களேசுவரனை நோக்கி, அரசிளஞ் சிங்கமே! வீரரேறே! என்று அவனை அருகழைத்து நிடதர்கோனை நோக்கி ? எனது நண்பரே! இவ்வீரனே எனது உயிர் உதவியவள்ளல். இக்குமரனே எனது குலத்தைக் காத்ததீரன். மகத தேசத்தரசனை அவனது பெருஞ்சேனையுடன். ஏகாங்கியாய் நின்று போர்செய்து வெற்றியடைந்த வீரன். இப்புண்ணிய சீலரைப் பெற்றவயிறும் எவ்வயிறோ? உற்றபதி எதோ? மற்று மரபேதோ? இச்சுத்தவீரன் எனக்கு வந்து உதவவேண்டிய காரணம்யாதோ? அறிகிலேன் ஆகையால் உமது உத்தம மருகனுகிய இவனது வரலாற்றினை அறியப்பேரவாகொண்டுள்ளேன். தயைசெய்து கூறுவீர் என்றும் நம்புகின்றேன். என்றனன் வஜ்ஜிரவாகு.

நிடத நாடனும் புன்னகை கொண்டவனுகி வஜ்ஜிரவாகுவை நோக்கி, "நண்பா! இவ்விளந்தோன்றலினது வரலாற்றினைக் கூறுமுன்னர் ஒரு கதை யொன்று கூறவிரும்புகின்றேன். அதைத் தாங்கள் கேட்பீர்களாக." என்று பின்வருமாறு கூறலுற்ருன்.

"இம்மலர் தலை யுலகத்தே மல்கிய வளங்கள் பலவுளதாகிய ஒரு நகரமுண்டு. அந்நகரத்தை யாளும் அரசனும் ஒருவனுண்டு. அவனுக்கு அளவற்ற செல்வமிருந்தும் நெடுநாள் புத்திரப்பேறின்றி யிருந்தான். பின்னர் அரனைநோக்கி அரிய தவங்கிடந்து அப்பெருமானது அருளினாலே ஒரு ஆண் மகவினையும் அடைந்தான். ஏதோ காலகதியினால் பாவச் செயலுக்கு அஞ்சாதவனாய் மனைவியையும் பிள்ளையையும் காட்டில் பாதவிக்கும்படி நீக்கிவிட்டான். நீக்கப்பட்ட அவர்கள் ஊழ்வினை வலியாலும் இறைவன் அருளாலும் உத்தம குலவணிகன் ஒருவனால் ஆதரித்துக் காப்பாற்றப்பட்டுவந்தனர். அவ்வுத்தமனால் அவ்விருவர்களும் ஆதரிக்கப் பெற்றுவரும் நாளொன்றில் திடீரென அக்குழந்தை உயிர்நீத்தது போன்று மூர்ச்சையாயிற்று. அதைக் கண்ட தாயானவள் குழந்தை இறந்ததென்று, துக்கமேலிட்டமையால் வாய்விட்டுக்கதறியழலுற்றாள். அத்தருணம் அவ்வழியாகச் சென்ற ஒரு சிவயோகி அமாதினிடம் மனமிரங்கி வருந்தாமலிருக்கும்படி அக்குழவியினது மூர்ச்சையைத் தெளிவித்து எழுப்பினார். அம்மாதும் துயரொழியப் பெற்றாள். பின்னர்ச் சிலகாலங்கழித்து அச்சிவயோகியார் மீண்டும் அவ்விடம் போந்து அக்குமாரனுக்கு வேண்டிய கலைகளைப் போதித்து யுத்தத்தில் பகைவரை வெல்லக்கூடிய ஒருவாளினையும் ஒருசங்கத்தையுங்கொடுத்து ஒருவராலும் வெல்லுதற்கரிய பலத்தையும் பெறுமாறு அருளிச் சென்றனர். அவைகளைப்பெற்று அக்குமரன் வளர்ந்துவரும்நாளில் ஒருநாள் தன்தகப்பனைப் பகையரசர்போரில் வென்று சிறைப்படுத்திக்கொண்டு செல்கின்றார்களெனக் கேள்வியுற்றுச்

சென்று அப்பகைவனை வென்று தனது தந்தையையும் விடு வித்தான்'' என்று கூறி முடித்து, வஜ்ஜிரவாகுவை நோக்கி" நீர் எதாகிலும் இத்தகைய சரித்திரத்தினை முன்னர்க் கேட்டதுண்டோ''? என வினவலுற்றான் நிடதர் கோனும். அதைக்கேட்ட வஜ்ஜிரவாகு ஒன்றும் தோன்றாதவனாகித் திகைப்புண்டிருந்தான். இதைக்கண்ட சந்திராங்கன் நகைத்து (வஜ்ஜிரவாகுவினது வயிற்றைச் சுட்டி) இவ்வயிறே இக்குமாரனைப் பெற்றவயிறாகும். இவனே நினது அருமந்த பிள்ளையாவான். அவனது தாயே நினது மூத்தமனையாளாகிய சுமதியாவாள் என்று கூறினான். இதனைச் செவியேற்ற வஜ்ஜிரவாகு மதிமயங்கி அறிவுசோர்ந்து மூர்ச்சையடைந்து வேறற்ற மரம்போல் கீழே விழுந்தான். விழுந்த அரசனை அருகிருந்த தனயனாகிய மங்களேசுவரன் சைத்தியோபசாரஞ் செய்து முகந்துடைத்து மூர்ச்சை நீக்கி, "என்னையனே! தாங்களேதுக்கு இவ்வண்ணம் துன்புறவேண்டும். எங்களது ஊழின் வலியாலன்றோ இவையனைத்தும் நடந்தேறப்பெற்றன. இதற்காகத் தாங்கள் வருந்த வேண்டியதில்லை. என்று கூறி மனதைத் தெளிவித்துத் தந்தையாகிய வஜ்ஜிரவாகுவினை எழுந்திருக்கும்படி வேண்டினான். அரசனும் எழுந்து ஒன்றும் கூறநாவெழாதவனாகி ஒருவாறு மனந்தேறி, அருகில் நின்றதனது மகனை மார்போடணைத்துக்கொண்டு பின்வருமாறு கூறி இரங்கலுற்றான்.

" கடுங்கானத் திடைதனியே நுமைவிடுத்து வரப்ப
ணித்த கடிய நெஞ்சக்
கொடும்பாவி தனைமகதன் கொல்லாமலுயிரளித்த
குமரா! கண்டு

நடுங்காம லுயிர்பொருந்திப் புல்லநீ கருணை
செய்தாய் ஞால மென்னை
யடுங்கால மென்பதலா லரசனென்று சொலத்தகுமோ
வந்தோ! அந்தோ!'' (வரதுங்கராமபாண்டியன்.)

அந்தோ! அறநெறியை என்னுமற்படி எனது மனைவியையும் புத்திரனையும் காட்டிற்கு ஓட்டிய யானும் ஒரு அரசனோ? கொலைபுரியும் புலையரினும் கடையனாகவன்றோ யானிருக்கின்றேன்? பாதகனாகிய யான் நாட்டிலிருப்பதைக்காட்டிலும் காட்டிற்கு ஏகுதலே நலமென்று கூறி எழுந்தான். அக்காலை அருகிருந்த அமைச்சர்களும் அரசன் சந்திராங்கனும் சமாதனஞ் செய்ய, துன்பம் நீங்கப்பெற்றோனாகி ஆசனத்து அமர்ந்தான்.

பின்னர் வஜ்ஜிரவாகு சந்திராங்கனை நோக்கி "இக்கொடியேனால் விட்டுவிடப்பட்ட எனது காதலி சுமதியையும் அருமந்த குமாரனையும் உள்ளன்போடு ஆதரித்து எனக்கு உதவிய உத்தமர் யாவர்? அவரது புத்திரன் எங்கே? அவர்களிருவரும் எங்கே இருக்கின்றார்கள். அஞ்சாத நெஞ்சுபடைத்த அறிவிலியாகிய யான் அவ்வுத்தமர்களால் மன்னிக்கப்படவேண்டும்" என்று வினவினான். உடனே சந்திராங்கன், வணிகன் பதுமராகனுக்கு அவனது குடும்பத்தோடு நிடத நாட்டிற்கு வரவேண்டுமென்று நிருபம் எழுதித் தூதர்பால் அனுப்பிவைத்து, பதுமராகனும் அவனது மைந்தன் சுனையனும் இன்னும் சில தினங்களுக்குள் வந்து சேருவார்கள் என்று வஜ்ஜிரவாகுவுக்கும் கூறினான்.

மாணவர்களே! வஜ்ஜிரவாகுவென்பான் ஏதோ தன்

மனைவிமக்களது ஊழின்வழியாலோ அல்லது தனது இனிய மனைவிமார்களின் தூண்டுதலினாலோ சுமதியையும் அவளது குழந்தையுங் காட்டிற்கு அனுப்பினவனை விருந்தும் தான் அங்ஙனம் செய்தது அறிவிலியின் செய்கை என்பதை, அவ்விருவர்களையும் ஆதரித்து நிலைநாட்டிய வணிகேசனைப் பார்க்கவேண்டுமென்றும், அவ்வணிகேசன்பால் தனது நன்றியைச் செலுத்தவேண்டுமென்றும் கருதினனேதவிர, நெடுங்காலம் பிரிந்திருந்த தனது மனைவியைக் கண்டு அளவளாவவேண்டுமென்று கருதினனில்லை. இதனால் நீங்கள்என்ன அறிகின்றீர்கள்.

> "எழுமை யெழுபிறப்பு முள்ளுவர் தங்கண்
> விழுமந் துடைத்தவர் நட்பு. (குறள்)

என்னும் ஆன்றோர் வாக்கின்படி. ஒருவன் தனக்குச் செய்த உதவியினை மறப்பானாயின், அவன் பாவத்தினின்றும் நீங்குவதற்கு வழியே கிடையாதாகையினால் நல்லோர்கள் தமது துன்பத்தை நீக்கினவரது சிநேகத்தைத் தம் எழுவகைப் பிறப்பினும் நினைப்பார்கள். வஜ்ஜிரவாகுவும் நல்லறிவு நல்லொழுக்கமுடையான் ஆகையால்அவ்வாறு கருதினன்.

வஜ்ஜிரவாகு வரசன், சந்திராங்கன் கூறியவாறு வணிகேசன் வரும் வரையினும் நிடதநாட்டிலேயே தங்குவதாகத் தீர்மானித்துப் பின்னர், தனது மனைவி தங்கியிருக்கும் இல்லத்தை யடைந்தான். "நன்றல்லது அன்றே மறப்பது நன்று" என்னும் முதுமொழிக்கிணங்க, கற்புடைய உத்தம பெண்மணியாகிய சுமதி தனது கணவனது கொடிய செயலை மறந்தவளாகி, கணவனைக் கண்டதும் முகமலர்ச்சி

யோடு வணங்கி வரவேற்று, வாய்விட்டு ஒன்றும் பேச முடியாமல் பிரமித்து நின்றாள். அவ்வண்ணம் நின்றதனது மனைவியைத் தழுவிச் சுமதீ! அறியாமற் செய்த காரியத்தைப்பற்றி மன்னிக்கவும். கழிந்த காரியத்தால் இனிக் கவலையுறல் உன் போன்ற உத்தமிகளுக்குத் தகுதியன்று; என்று இவ்வண்ணம் சில வார்த்தைகள் கூறி அவளைத் தேற்றினான். பின்னர் இருவரும் ஒருவரோடு ஒருவர் அளவளாவ ஆண்டுத் தங்கினான். சந்திராங்கனால் பலவகைப் பட்ட உபசாரங்கள் நடைபெற்றன. இஃது இங்ஙனமிருக்க சந்திராங்கனுடையபிருபத்தைக் கண்ட வணிகேசன் தாமதமின்றித் தனது குடும்பத்துடன் நிடதநாட்டை யடைந்தான். அரசனால் எதிர் கொள்ளப்பட்டு உபசரிக்கப் பெற்றான். வணிகேசனது வரவு வஜ்ஜிரவாகுவுக்கு அறிவிக்கப் பட்டது. அதைக் கேட்டவுடன் ஆநந்த பரிதனாகிக் காற்றெனக் கடிதுவந்து வணிகேசனைக் கண்டு வந்தனங் கூறி ஒருவரை யொருவர் தழுவிக்கொண்டனர். பின்னர் வஜ்ஜிரவாகு வணிகனை நோக்கி எங்கள் குலத்தைக்காத்து எனக்கு அறிவு புகட்டிய ஐயனே! யான் உங்களுக்கு என்ன பேருதவி செய்யப் போகின்றேன். யான் அத்தகைய கொடிய செயலைச் செய்யாமற்போனால் தங்களைப் போன்ற பரோபகாரிகளின் சிநேகம் எவ்வாறு கிடைத்திருக்கும்; என்று இவ்வாறு பேசிக்கொண்டிருக்குந் தருவாயில் சிவயோகியார் ஆண்டு எழுந்தருளினர். அப்பெரியாரைக் கண்டதும் மங்களேசுவரனும் சுனையனும் பரிந்து சென்று அடிபணிந்தனர். அரசன் சந்திராங்கன் வஜ்ஜிரவாகு முதலானவர்கள் வணங்கி வரவேற்று ஆசனமளிக்கச் சிவயோகியா

ரும் வீற்றிருந்தார். முனிவர்களைக் கண்டால் உபசரிக்க வேண்டும் என்ற முறைமைபற்றி வஜ்ஜிரவாகுவும் வரவேற்றனனே தவிர, அப்பெரியார் இன்னாரென்பதை அறியான்ஆகையால் அங்கிருந்த மற்றவர்களைப்போல் சிவ யோகியரோடு கலந்து பேசாமலிருந்தான். இதைக்கண்ட மங்களேசுவரன் மனம்பொறுதவனாகித் தனது தந்தையை நோக்கி, "தந்தையே! இப்பெரியாரைத் தாங்கள் இன்னா ரென்று உணரவில்லைபோலவும். இப்பெரியோரே நினது தனையனின் உயிர்உதவிய தபோநிதியாவர். இப்பெருந் தகையாளரே எமத்தேரினனை வென்று நமது ஆருயிரை யும் அளித்த வள்ளல். இக்கருணாநிதியே கீர்த்திமாலி னியை நமக்கு மருமகளாக்கிய மாண்புடையார். இன்னும் முடிவாகக் கூறுவேனாயின் நினது ஐசுவரியமனைத்தும் இப்பெரியாரின் பேருதவியேயாகும்" என்று மொழிந்தான். இதைச் செவியேற்றதும் அடங்காத ஆனந்தங்கொண்டு உடல்பூரித்து ஆசனத்தைவிட்டெழுந்து விரைந்துசென்று விடபயோகியை அணுகி அவரது அடிகளில் விழுந்தான். விடபயோகியும் விழுந்த வஜ்ஜிரவாகுவை வாரியெடுத்து ஆசீர்வதித்தார். அடியவரின் ஆசிர்வாதம்பெற்ற அரசன் சுவாமி! மடைமையினால் மனைவியையும் மகனையும் நீக்கிய அறிவீனத்தையும் மன்னித்து ஆட்கொள்ளல்வேண்டுமென்று விண்ணப்பித்தான். அத்தருணம் அடிகள் கூறும்; "வஜ் ஜிரவாகு! நீர் அஞ்சுவானேன். அவர்களது ஊழ்வலியால் அவையனைத்தும் நடைபெற்றனவே தவிர நின்னறியாமையா லன்று. அவர்களது ஊழின் வலியை உணர்த்த ஒரு சிறு கதை கூறுகின்றேன். சிலகாலத்துக்குமுன்னர் அவந்தி

என்னும் புராதன நகரத்தின்கண் ஒரு அந்தணன் இருந்தான். அவனுக்கு அளப்பரும் செல்வமுண்டு. செல்வச் செருக்கினல் குலகிரியைகளை மறந்தவனாகித் தீயவழியில் ஒழுகி ஒரு பரத்தை மாதினை நேசித்து வாழ்ந்துவரலானான். அக்காலை ஒருநாள் மாலைப்பொழுதில் ஒரு துறவி காற்றினாலும் மழையினாலும் பீடிக்கப்பெற்றவராகி, அவ்விருவர்களின் விதிவலியால் அவர்களது இல்லத்தையடைந்தார். அங்ஙனம் அடைந்த துறவியைக்கண்ட பார்ப்பனனும் பரத்தையும் ஓடிவந்து அடிபணிந்து உள்ளேயழைத்துச் சென்று வேண்டியவாறு உபசரித்து அன்றிரவை அவர்களது இல்லத்தேயே கழித்துச் செல்லுமாறு வேண்டினர். துறவியும் அதற்கு உடன்பட்டு அன்றிரவை அங்கேயே கழித்து விடிந்ததும் தமதுவழிமேற்சென்றார். அவ்வந்தணனும் அவளது காமக்கிழத்தியும் பின்னர்ச் சின்னாளிருந்து, அந்தணன் முன்னும் பரத்தை பின்னுமாக இம்மண்ணுலகத்தை நீத்தனர். அவ்வண்ணம் நீத்த அவ்விருவரும், அக்காலை மகப்பேறின்றி தவம் பலகிடந்து வருந்திய இருவேறு அரசர்களுக்கு ஆண்மகவாகவும் பெண்மகவாகவும் முறையேதோன்றினர். அவ்வந்தணனே இப்பத்திராயுவென்னும் மங்களேசுவரன் அப்பரத்தையே இக்கீர்த்திமாலினி யாவாள். அந்தணன் தனது குலாசாரத்தைவிட்டுத் தாழ்ந்த வழியில் ஒழுகியவதனால் அவன் அடையவேண்டிய பதவியும் தாழ்ந்ததாகவே முடியுமாயினும் ஏதோ கிஞ்சித்காலம் ஒரு துறவியை ஆதரித்ததன் பயனாகவன்றோ இப்பதவியை யாயினும் அடைந்தான். மேலும் அடாத ஒழுக்கத்தினால்

அவன் அடைந்த கோபத்துக்கு அளவேயில்லை. அக்கோபத்தின் மேலீட்டால் அவன் இறந்தவன் போன்று பெரு மூர்ச்சை யானகாலத்து அத்துறவியே மீண்டும் தோன்றித் தனது கைடமையை அஃது கைமாறு செலுத்தி, அவனது நோயை நீக்கி மூர்ச்சையைத் தெளிவித்து எழுப்பினர். பின்னரும் அவனுக்கு வேண்டிய கலைகளைப்போதித்து வாளொடுசங்கத் தையுந் தந்தருளினர். அத்துறவியும் இப்போது இங்கேயே யுள்ளார். என்று கூறி அவ்விருவர்களின் பழம்பிறப்பை யுணர்த்தினர்.பின்னரும் வஜ்ஜிரவாகுவைநோக்கி அரசனே இனித் தம்பதிக ளிருவரையும் தசானன நகரத்தினுக்கு அழைத்துச் சென்று அரச காரியத்தைப் பார்க்கச் செய் வாயாக!" என்று ஆஞ்ஞாபித்தார். இச் செய்தியைக் கேள்வி யுற்ற அனைவரும் ஆச்சரியம் கொண்டார்கள். இப்பெரியா ரின் ஆற்றல்தான் எத்தகையதோ? என்று வியந்து விடப யோகியின் பாதங்களில் வீழ்ந்து சேவித்துக்கொண்டனர். சிலர் இப்பெரியாரது அநுக்கிரஹத்தைப்பெற்ற மங்களேசு வரனது புண்ணியமே புண்ணியம் என்று வியந்து கூறினர் கள். விடபயோகியும் விடைபெற்றுச் செல்லப்புறப்பட்டார். அச்சமயம் வஜ்ஜிரவாகு அடிகளின் அடிகளில் வீழ்ந்து எழுந்து சுவாமி இவ்வளவு காரியம் செய்தருளிய, நமது மாணவனுக்குத் தங்களது திருக்கரத்தினலேயே முடி சூட்டவேண்டும்." என்று விண்ணப்பித்தான். சுவாமிகளும் அதற்கிசைந்து அரசனைநோக்கி, 'நீர் அஞ்சவேண்டுவதில்லை அச்சமயம் யாம்அங்குத் தோன்றி முடித்துவைப்போம்,' என்று உறுதிமொழிகூறிச்சென்றனர். பின்னர் வணிகேசன் பதுமராகனும் கனையனும் எல்லோரிடமும்விடைபெற்றுக் கொண்டு தனது இருப்பிடஞ் சென்றனர்.

அரசன் வஜ்ஜிரவாகுவும் தனது குடும்ப சகிதம் தசானன நகரத்துக்குச் செல்லவேண்டும், என்ற விருப்பத்தைச் சந்திராங்கனுக்கு அறிவித்தான. நிடதர் கோனும் ஆநந்தங்கொண்டு அவர்களது செலவினுக்கேற்ற ஏற்பாட்டினைச் செய்யுமாறு, அமைச்சனுக்குக் கட்டளையிட்டான். கட்டளையைச் சிரமேற்கொண்ட அமைச்சனது ஏவலால், மனோவேகத்திலும் விரைந்து செல்லக்கூடிய நந்நான்கு குதிரைகள் பூட்டிய இரண்டு தேர்கள் வானத்தை யளாவிய கொடிச்சீலைகளுடன் கோயிலின் வாயிலிலே வந்துநின்றன. சந்திராங்கனிடமும் அவனது மனைவி சீமந்தினியினிடமும் விடைபெற்றுக்கொண்டு, வஜ்ஜிரவாகுவும் சுமதியும் ஒரு தேரில் ஏறியமர்ந்தார்கள். மற்றொரு தேரில் மங்களேசுவரனும் கீர்த்திமாலினியும் ஏறியமர்ந்தார்கள். நல்லோரையில் நால்வகைச்சேனையும் புடைசூழ இருதேர்களும் புறப்பட்டன. பல மலைகளையும் காடுகளையும் கடந்து தசானன நகரத்தை யடைந்தார்கள். அந்நகரவாசிகள் அனைவரும் ஆவினைக்கண்ட கன்றுபோல் ஆநந்தத்தோடு விரைந்து சென்று வரவேற்றனர். நெடுநாளாகக் காணாதிருந்த தமது இராணியைக் கண்டு களித்தார்கள். குழந்தை வடிவமாகச் சென்று குமரவடிவங்கொண்டு குமரியோடு வருகின்ற தங்களது இளவரசனை வாயார வாழ்த்தினார்கள். இரண்டு இரதங்களும் அரசவீதியையடைந்து அரண்மனைவாயிலில் நின்றன. பலவகை வாத்தியங்கள் முழங்க இரதத்தைவிட்டிறங்கி அனைவரும் உள்ளேசென்று அவரவர்கள் காரியங்களைக் கவனிக்கலாயினர். அன்றைய பொழுதும் முடிந்தது. அந்நகரத்துள்ளார் அனைவரும் தங்

களது இளவரசனைப்பற்றியும் இளவரசியைப்பற்றியும் வியந்து கூறிக்கொண்டே அன்றிரவைக் கழித்தனர்.

---

## பதினைந்தாவது அத்தியாயம்.

அங்ஙனமிருந்த அந்நகரின் குதூகுலத்தினைத் தானும் அநுபவிக்கவேண்டி ஆதித்தனும் கீழ்க்கடலில் தோன்றினன். அரசன் வஜ்ஜிரவாகு தனது காலைக்கடன்களை முடித்துக்கொண்டு அரசவையை அடைந்து ஆசனத்திலமர்ந்தான். அங்குள்ள அமைச்சர், குடிகள் முதலானவர்களைப்பார்த்துப் பின்வருமாறு கூறலாயினன்.

"எனது அன்பார்ந்த குடிகளே! அமைச்சர் முதலியோர்களே! யான் நெடுநாளாக உங்களைப் பரிபாலித்து வருகின்றேன். எனக்கோ வயோதிகம் மேலிட்டுவிட்டது. இனி என்னால் இவ்வரசகாரியங்களைப் பார்க்கவியலாது. ஆதலால் உங்களது இளவரசனாகிய மங்களேசுவரனுக்கு முடிசூட்டுவீர்களாக'' என்று விண்ணப்பித்தான். குடிகளும் அமைச்சர்களும் அதற்கு உடன்பட்டனர். உடனே அவைக்களத்துச் சோதிடரால் முடிசூட்டுவதற்கான நல்லோரை கணிக்கப்பெற்றது. நகரமும் அலங்கரிக்கப்பெற்றது. அரசசிப்பந்திகள் அனைவரும் பட்டாபிஷேகத்துக்கு வேண்டிய பொருள்களைச் சேகரித்துவைத்தனர். இதற்குள் மகுடாபிஷேகத்துக்குரிய நாழிகையும் கிட்டியது. தாம் கூறியவண்ணமே விடபயோகியாரும் வந்து சேர்ந்தனர். மங்களேசுவரனும் கீர்த்திமாலினியும் புண்ணியப்புனலாடி உடுக்கவேண்டுவனவற்றை யுடுத்து அணியவேண்டுவன

வற்றை அணிந்து, முடிசூடுவதற்கென கணிக்கப்பெற்ற நல்லோரையிலே, வேதவொலி, வாழ்த்தொலி, வாத்திய வொலி முழங்க அரசவையை யடைந்தனர். ஆண்டுக் குழுமியிருந்த, சிவயோகியார் போன்ற பெரியோர்களின் உத்தரவுபெற்று அரியணை ஏறியமர்ந்தனர். உடனே விடபயோகியார் தமது ஆசனத்தைவிட்டெழுந்து அங்குச் செய்யவேண்டிய சடங்குகளனைத்தையும் செவ்வனேசெய்து, பாரம்பரியமாகவந்த நெடுமுடியினை மங்களேசுவரனுக்குச் சூடினார். அந்தணர் ஆசிகூறினர். அரம்பையர்போன்ற நடனமாதர்கள் நாட்டியமாடினர். நகரெங்கும் பலவகை வாத்தியங்கள் முழங்கப்பெற்றன. வரியோர்களுக்குப் பல வகைத் தானதருமங்கள் வழங்கப்பெற்றன. அங்ஙகாமாந்தர்கள் அனைவரும் தமது அரசகுமாரரின் மகுடாபிஷேகத்தைக் குறித்துப் பெருவிழா கொண்டாடினார்கள. விடபயோகி முதலாக முடிசூட்டும் விழாவினுக்காக வந்திருந்தவர்கள் அனைவரும் அவரவர்களது இருப்பிடஞ்சென்றனர்.

மங்களேசுவரனின் மகுடாபிஷேகத்தின் அறிகுறியாக முன்னர்ச் சிறைப்படுத்தப் பட்டிருந்த மகதநாட்டு அரசனான ஏமத்தேரினனையும் விடுவித்து அவனது நாடு சென்று பகுதி செலுத்தி ஆண்டிருக்கும்படி ஆணையிட்டனர். இவ்வண்ணம் வஜ்ஜிரவாகு தனது அரசகாரியத்தைத்தனது தனயனிடம் ஒப்படைத்து விட்டுச் சின்னாளிருந்து கடவுளின் திருவருளை முன்னிட்டான். சுமதியும் தனது கணவனின் திருவருளை முன்னிட்டாள். அன்று முதல் மங்களேசுவரனும் தனது அரச காரியங்களைப் பார்க்கலாயினன். ஆண்டில் இளைஞனாயினும், அறிவில்

முதியனாக இருந்தபடியால் அரசன் மங்களேசுவரன் தனது ஆளுகையைத் திறமையும் ஒழுங்குமாக நடத்தி வாலாயினன். அற்ப விஷயமாயினும் அவன் அமைச்சர்களுடன் ஆலோசிக்காமற் செய்வதில்லை. சிலமாதங்களுக்குள்ளாகவே நீதிபரிபாலனத்தில் அவன நிகரற்றவன் என்னும் பெயரினைப் பெற்றான். குடிகள் அவனிடம் சென்று தங்கள் குறைகளைச் சொல்லிக் கொள்வதற்குச் சமயம் வெண்டியதில்லை. எக்காலத் தனது குடிகள் தன்னை நாடி வருவார்களோ என்று எதிர் பார்த்த வண்ணமாகவே யிருப்பான். அவன் தனது இளமைப் பருவத்திலேயே மகதநாட்டு அரசனாகிய எமத்தேரினனை வகாங்கியாக நின்று போர்செய்து வென்றவனாகையால் பல நாட்டுச் சிற்றரசர் பலரும் மங்களேசுவரனிடத்தில் அச்சங்கொண்டு அடங்கி நடந்துவந்தார்கள்.

> " நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே ;
> மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம் ;

அதனால்

> யான்உயி ரென்பது அறிகை
> வேல்மிகு தானை வேந்தற்குக்கடனே."
>
> (புறநானூறு.)

என்ற ஆன்றோரின் கொள்கையை முற்ற உணர்ந்தவனாகையால் மங்களேசுவரன் குடிகளாகிய பல உடலில் தான் ஓர் உயிரேபோன்று உலவி உலகம் ஓம்பினான். இவ்வண்ணம் அரசன் மங்களேசுவரன் மனுமுறை தவறாது செங்கோல் செலுத்திவரும் நாளில் வசந்தகாலமொன்றில் தனது மனைவி கீர்த்திமாலினியோடு தன்காட்டின் புறத்தே

யுள்ள வனமொன்றிலிருக்கும் சிங்காரத் தோட்டத்திற்குச் செல்லவேண்டுமென விரும்பித் தனது அமைச்சர்களுக்குக் கூறினன். அமைச்சர்கள் அதற்குவேண்டிய ஏற்பாடுகளைச் செய்துமுடித்து அரசனுக்கு அறிவித்தார்கள். அரசன்தன் மனைவியோடு தனக்கென்று அலங்கரிக்கப்பெற்ற தேரொன்றிலிவர்ந்து நால்வகைச் சேனையோடு அமைச்சர் பலருஞ் புடைசூழச்சென்று நகரைக்கடந்து வனம்புகுந்து சிங்காரத் தோட்டத்தையடைந்தான். ஆண்டுச் சண்பகம், பலா, கமுகு, சந்தனம், தேமா, அண்டமுகடும் பிளவுபடும்படி வளர்ந்திருக்கும் கோங்கு, விளா, மந்தாரம் என்னும் விருக்ஷங்கள் பார்ப்போர்பார்வை நுழைவதற் கிடமில்லாமல் நெருங்கி, காததூரமட்டும் பரிமளங் கமழும்படி வளர்ந்திருந்தன. அச்சோலையிலுள்ள வண்டுகள் பாடுவதும், மயில்கள் ஆடுவதும், குயில்கள் கூவுவதும் கேட்போர்மனதை ரமிக்கச் செய்த. இத்தன்மையுள்ள வனத்தில் மங்களேசுவரன் முல்லைமுடித்த கூந்தலையுடைய தன் மனைவி கீர்த்திமாலினியோடு வழிவந்த இளைப்புநீங்கி யிருந்தான். அந்நணம் அந்தணன் ஒருவன், அழகில் திருமாளை யொப்பவளும், கற்பில் அருந்ததி போன்றவளுமாகிய தனது மனைவியோடு அதிக துக்காக்கிராந்தனாய் அரசனை அடைந்தான். அடைந்த அந்தணனை அரசன் முகமன்கூறி அவனதுஇடையூற்றினை வினவினன். அந்தணனும் அரசனை நோக்கி "அறத்துடன் உலகம் புரக்கும் அரசனே! மன்னர்களாகிய மத்தகஜங்களுக்கு மடங்கல் போன்றவனே! எங்ளுக்கு ஏற்பட்டிருக்கும் இடையூற்றினை என்னென்று கூறுவது. அந்தோ! வயப்புலி போன்று எங்களைக்கொல்

வான் வேண்டித் தொடர்ந்து வருகின்றது. அவ்விடை யூற்றி னின்றும் காப்பாற்றுவது தங்களுடைய கடமையே யாகும்" என்று விண்ணப்பித்தான். அரசன் கேட்டு அந் தணனைநோக்கி "நீர் அஞ்சவேண்டுவதில்லை யான் உங்களைக் காப்பாற்றுகிறேன்" என்று உறுதிமொழி புகன்று வில் லும் அம்பும் கைக்கொண்டு தொடர்ந்துவரும் புலியைக் கொல்ல யத்தனித்தான். அவ்வண்ணம் யத்தனித்த அர சன் வருவதற்குமுன், தொடர்ந்துவந்த புலியானது அந்தப் பார்பனத்தியைப் பற்றிக் கொண்டது. புலிகோட்பட்ட பார் பனத்தி அரசன் முகம்நோக்கி "ஏ மன்னவரேறே? யான் புலிகோட் பட்டேன், எனது உயிரைக் காப்பாது நினது பாரமாகும்" என்று கூறி மின்னார் செஞ்சடை மேனிச் சிவபெருமானது திருநாமத்தையுச்சரிக்கலாயினள். இதைச் செவியேற்ற அரசன் மங்களேசுவரன் தன்னிடமிருந்து பாணங்களுள் சிலவற்றை அப்புலயின்மேல் விடுத்தான் விடுத்த பாணங்களனைத்தும் பூவென அப்புலியின் மேல் விழுவதைக் கண்ட மங்களேசுவரன் மனந்திடுக் கிட்டு ஒன்றும் தோன்றாமல் திகைப் புண்டான். இதற்குள் அப்பார்பனத்தியினது உயிரும் உடலை விட்டு நீங்கியது. அவ்வேங்கையும் தன்னால் கொல்லப் பட்ட அவளை யுண்பதற்குக் கௌவிக் கொண்டு அரு கிருந்த ஒரு மலைக் குகையை நாடிச் சென்றது. இதனால் அரசனுக்கு உண்டான துக்கத்துக்கு அளவே கிடையாது. அந்தணனோ வென்றால்; "அந்தோ! இவ்வுலகில் யான் மனைவியை இழந்து ஆருமற்ற அனாதையானேனே! அவள் இக் கொடிய வேங்கையின் வாயில் அகப்படுவதற்கு

ஏதேனும் வாழ்வினைப் பயனுண்டோ? எனது கற்பிற் சிறந்த காதலி யானவள் உயிரிழந்ததைக் கண்டும் இரும்பை யொத்த வன்னெஞ்சினனாகிய யான் இன்னமும் இறவாமலி ருக்கின்றேனே?" என்று தனது மனைவியின் குணநிசயங்களை எடுத்து கூறி வருந்தி அரசனை நோக்கினான். மங்களேசு வரா! அந்தணர்களுக்கு உண்டாகும் இடுக்கண்களைக் களைவது வேந்தர்களது கடமையன்றோ! அவ்வாறிருக்க நின்னிடம் சரணாகதி அடைந்த அந்தப் பார்ப்பனத்தியைக் காக்கவேண்டு மென்று என்னைமலும்கூடக் கொல்லும் புலிக்கு ஆகாரமாகக் கொடுத்து விட்டனையே? நினது வீர மென்னே! ஆண்மையென்னே? நினது சத்தியமென்னே? நினது செங்கோலின் பயன் தானேன்னே? நினது ஆசானு தவிய வாளெங்கே? சங்கமெங்கே? பகை வரை வெல்லக் கூடிய பல மெங்கே? என்று பலநிந்தனைகள் கூறி மீண்டும் அரசனை நோக்கி அரசனே! போனதுபோகட்டும் யான் தவமியற்றுவதற்காக இக்கானகம் அடைந்தேன். எனது மனைவியின் கதியோ அவ்வாறாயிற்று. இனி எனக்குப் பணிவிடைசெய்வார் யாருமில்லை. அதலால் எனது தவ முயற்சியும் குன்றும் அதனால் உனக்குஅதிக பாவம் சம்ப விக்கும். ஆகையால் உன்னருகிலிருக்கும் நினது மனைவியை எனக்குத் தருதல்வேண்டும்" என்றனன். இதைக்கேட்ட மங்களேசுவரன் மனமுளைந்து "என்செய்வது அந்தணனோ இவ்வாறு கேட்கின்றார் மறுத்தால் சாபம்வந்து சம்பவிக் கும். மனைவி கீர்த்திமாலினியோ கற்புடையாளாயிற்றே என்செய்வது, கடவுள்விட்டவழி யாகட்டும்' என்று தனக் குள்ளாகவே சிந்தித்து; அந்தணனை நோக்கி "அந்தணச்

சிரேட்டரே! தாங்கள் இச்சித்தவண்ணமே அடையுங்கள் என்று கூறி. கீர்த்திமாலினியை நோக்கித் தாயே! இவ்வந்தணரோடு தாங்கள் செல்லுங்கள்." என்று கூறிவிட்டு இனி உயிருடன் இருத்தல் தவறு என்று தீவளர்த்து அதிலிறக்கவாரம்பித்தான். அக்காலை எல்லாம்வல்ல இறைவன் பார்வதி சமேதனாய்த் தோன்றி மங்களேசுவரா! அவசரப்படாதே! யாம் உம்மைச் சோதித்து ஆட்கொள்வான் வேண்டியே இவ்வண்ணம் செய்தனம். புலிவாய்ப்ப் பட்டவளே பார்வதிதேவியாவாள். யானே அவ்வந்தணனாவேன். நீ நினது மனைவியோடு சென்று இனி அரசகாரியங்களைப் பார்த்துப் பின்னர் நம்மை அடைவாயாக! என்று அருளி மறைந்தனர். இதைக்கண்ட அரசன் நாம் செய்தபாக்கியமே பாக்கியம் என்று மனங்களித்து, மனைவியோடு நகரஞ் சென்று, அரசகாரியங்களைச் செவ்வனே பார்த்து வரலாயினன்.

சுபம் சுபம் சுபம்.

முற்றிற்று.

---



The Arrow Press, Mount Road, Madras.